# ஒருமனதுடன் போற்றப்படும்

## சென்னை
## காஸினோ.. கிரௌன்
## ஸரஸ்வதி...

தினசரி 3 காட்சிகள் : மாலை 2, 6 & 9-30 மணி

முதல் இரண்டு வகுப்புகளுக்கு காலை 9-30 முதல் 12 மணி வரை 3 தியேட்டர்களும் முன்னதாக டிக்கட்டுகள் தரப்படும்

கீழ்க்கண்ட இடங்களிலும் நடைபெறுகிறது

| | | |
|---|---|---|
| பெங்களூர் | ... | நியூ ஆபரா |
| ,, | ... | சாரதா |
| ,, | ... | ஸ்வஸ்திக் |
| மதுரை | ... | சிந்தாமணி |
| கோயமுத்தூர் | ... | ஷண்முகா |
| திருச்சி | ... | வெலிங்டன் |
| சேலம் | ... | நியூ சினிமா |
| தஞ்சாவூர் | ... | நியூ டவர் |
| கும்பகோணம் | ... | ராஜா |
| திருநெல்வேலி | ... | ராயல் |
| வேலூர் | ... | தாஜ் |
| காஞ்சிபுரம் | ... | ராஜா |
| பாண்டிச்சேரி | ... | கமர்ஷியல் சினிடோன் |
| திருப்பாபுலியூர் | ... | நியூ சினிமா |
| காரைக்குடி | ... | சரஸ்வதி |
| திருவண்ணாமலை | ... | கார்த்திகேயா டூரிங் |
| நாகர்கோயில் | ... | கிருஷ்ணா |
| திருவனந்தபுரம் | ... | நியூ தியேட்டர் |
| ஆலப்புழை | ... | சீமாட்டி |
| கோட்டயம் | ... | சென்ட்ரல் |
| எர்ணாகுளம் | ... | பத்மா |
| பாலக்காடு | ... | நியூ தியேட்டர் |
| கன்னிககோட்டை | ... | காரநேஷன் |

பக்ஷிராஜாவின்

# ஏழை படும் பாடு



NARAYANAN Co
*Release*



# வேலையை முடிக்க

# மலிவாக சீக்கிரமாக சுலபமாக

## அக்ரிகோ மண்வாரிகளை உபயோகியுங்கள்



விவசாயிகள், சுரங்கம், இருப்புப்பாதை முதலியவைகளில் வேலைசெய்பவர்கள், ரஸ்தாக்களை அமைப்பவர்கள் இவர்கள் யாவரும் டாடா அக்ரிகோ மண்வாரிகளையே விரும்புகிறார்கள். விசேஷமான ஹைகார்பன் எஃகால் தயாரிக்கப்பட்ட இம்மண்வாரிகள் நீடித்துழைக்கக் கூடியவையாதலால் இவைகளே கடைசியில் மிகவும் சிக்கனமானவை. உயர்தரமான அமைப்பு உள்ளவையாதலால் இவை கையாளுவதற்கு மிகவும் சுலபமாக இருக்கின்றன. ஆகையால்தான் அவை உங்களுடைய வேலையையும், நேரத்தையும் மிச்சப் படுத்துகின்றன.

## டாடா அக்ரிகோ கருவிகள்




கிளை ஆபீஸ்கள்: பம்பாய், மதராஸ், கான்பூர், ஜலந்தர், நாக்பூர், விஜயநகரம், ஸெகிந்திராபாத்.

**நீடித்த மலிவான உழைப்புக்காக அக்ரிகோ கருவிகளையே வாங்குங்கள்.**

இப்பொழுது தமிழ் நாடெங்கும் முக்கிய
நகரங்களில் ஓடிக்கொண் டிருக்கிறது!



ப்ரதிபாவின்

# சொப்பன சுந்தரி

தயாரிப்பு, டைரக்ஷன்: ஜி. பலராமய்யா - ஸ்டுடியோ: வாஹினி

ஆந்திரா, ஸீடெட் ஜில்லாக்களிலும் நைஜாம், மைசூர் சமஸ்தானங்களிலும் இதன் தெலுங்குப் படம் ஓடிக்கொண்டிருக்கிறது!

டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:

| தமிழ்நாடு & மைசூர் சமஸ்தானத்திற்கு | ஆந்திரா, ஸீடெட் ஜில்லா & நைஜாமுக்கு |
|---|---|
| நல்லம் பிக்சர்ஸ் சர்க்யூட், பெங்களூர்-2 | பூர்ண பிக்சர்ஸ், பெஜவாடா |

## விளம்பரம்

### சர்க்கார் கீழ் நாட்டுக் கலை கையெழுத்துப் பிரதி நூல் நிலையம்

**[Govt. Oriental Manuscript Library]**

**திருவல்லிக்கேணி — சென்னை 5.**

*

இந்நூல் நிலைய அதிகாரி (Curator) அவர்கள் மேற்படி நூல் நிலையத்திற்குப் பலதிறப்பட்ட மொழிகளிலுள்ள ஓலைச் சுவடிகள் போன்ற பழைய கையெழுத்துப் பிரதிகளைச் சேகரிக்கவும், அவற்றைப் பாதுகாக்கவும் வேண்டிய முயற்சிகளை எடுத்துக் கொண்டிருக்கிறார்.

ஆனதுபற்றி:—

1. அத்தகைய பிரதிகளைத் தங்கள் வசமே வைத்திருப்பவர்கள் அவற்றை ஷை நூல் நிலையத்திற்கு வெகுமதியாகவோ, விலைக்கோ நகல் எடுத்துக் கொள்ளவோ கொடுத்துதவுமாறு கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

2. அல்லாத பொது ஜனங்கள் அவற்றை வைத்திருக்கும் நபர்களைப் பற்றிய தகவல்களை அறிவிக்கும்படிக் கோரப்படுகிறார்கள்.

3. கையெழுத்துப் பிரதிகளைப் பெறுவதற்கு உதவி செய்பவர்கட்கு உசிதப்படி சன்மானம் அளிக்கப்படுவார்கள்.

4. சகலவிதமானக் கடிதப் போக்குவரத்துகளும் ஷை அதிகாரிகளுடனேயே செய்யப்பட வேண்டும்.



# கல்கி பொருளடக்கம்



மலர் 10
இதழ் 18

டிசம்பர் 3

விக்ருதி ௵
கார்த்திகை 18



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## அட்டைப்பட விளக்கம்

**மா**ய மானைப் பின் தொடர்ந்து சென்ற ராமன், அந்த மானை மாய்த்து விட்டுச் சீதை இருந்த இடத்தை நோக்கி ஓடி வந்தான். கூந்தலில் பூங்கொத்துக்களைச் செருகி உல்லாசமாக இருக்கும் சீதையைக் காணவேண்டும் என்ற அளவு கடந்த ஆவலுடன் ஓடி வந்தான். ஓடி வந்தவன் சீதையைக் காணாமல் திக்பிரமை கொண்டு நின்றான். தன் கூட்டைவிட்டு உயிர் பிரிந்து சென்று விட்டதுபோல் ஸ்தம்பித்து நின்றான்.

அடுத்தகணம் வையம் சுழன்றது; வானம் சுழன்றது. மலைகள் சுழன்றன; கடல்கள் சுழன்றன. பூலோகம் புவர்லோகம், சுவர்லோகம் ஆகிய மேலேழுலகங்களும் கீழ் நோக்கிச் சுழன்றன. அதல, விதல, சுதல, பாதாள லோகங்களாகிய கீழ் ஏழுலகங்களும் மேல் நோக்கிச் சுழன்றன. இப்படி ஊழிக் கடையின் பிரளய உற்பாதங்கள் நிகழ்வது போல் தோன்றின ராமன் கண்களுக்கு.

தமையனின் மனநிலையை உணர்ந்த தம்பி லக்ஷ்மணன், "இப்படி உட்கார்ந்திருப்பதில் பயனில்லை. சீதையைத் தேடிச் செல்வோம்" என்றான். அளவு கடந்த துயரத்தை உள்ளத்தில் ஏந்தித் தள்ளாடித் தள்ளாடி ராமனும் லக்ஷ்மணனும் சென்றார்கள்.

வழியில் ஜடாயு ரத்தக் களரியில் வீழ்ந்து கிடப்பதைக் கண்டார்கள். உடனே ராமன் துயரம் ஆற்ற முடியாத அளவுக்குப் போய் விட்டது. பிரலாபித்து விட்டான்.

"என் மனைவி சீதையை எவனோ ஒருவன் பற்றிச் செல்ல, அந்தக் கொடுமையை எதிர்த்த உத்தமனே, உனக்கு இக்கதியா நேர்ந்து விட்டது! இதை யெல்லாம் பார்த்துக் கொண்டு நானும் நிற்கிறேனே!" என்று புலம்புகிறான் ராமன்.

என் தாரம் பற்றுண்ண என்றனையைச் சான்றோயைக்
கொன்றானும் நின்றான் கொலையுண்டு நீ கிடந்தாய்!
வன்தாள் சிலை ஏந்தி வாளிக் கடல் சுமந்து
நின்றேனும் நின்றேன் நெடுமரம்போல் நின்றேனே!

சக்கரவர்த்தித் திருமகன், ராமன் இப்படிப் புலம்ப வேண்டுமென்றால் ஜடாயு எவ்வளவு உயர்ந்த பாத்திரமாக இருக்க வேண்டும். பார்க்கப்போனால் பறவைதான். அந்தப் பறவையைத் தசரத சக்கரவர்த்திக்குச் சமமாக மதிக்கிறான் ராமன். நம்மையும், கவிச் சக்கரவர்த்தி கம்பர் தமது அற்புத கவிதாசக்தியின் மூலம் அவ்விதமே எண்ணச் செய்கிறார்.



# தமிழ் இசைச் சங்கம், சென்னை

## எட்டாவது தமிழ் இசை விழா : 1950-51

அரண்மனைக்காரத் தெருவிலுள்ள செயிண்ட் மேரி மண்டபத்தில்

**தொடக்க விழா : 23-12-1950 மாலை 5 மணி**

திறப்பாளர் : சென்னை அரசாங்க முதல் அமைச்சர் கனம் பி. எஸ். குமாரசாமி ராஜா அவர்கள்

தலைவர் : யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கள்

○●○

| | | |
|---|---|---|
| **1**<br>23—12—1950<br>சனிக்கிழமை<br>மாலை 4-00 | செல்விகள் லக்ஷ்மி, வசந்தா | — பாட்டு |
| | கோயமுத்தூர் ஸ்ரீ ராமச்சந்திர ராவ் | — பிடில் |
| | வயலூர் ஸ்ரீ வைத்தியநாத ஐயர் | — மிருதங்கம் |
| மாலை 6-00 | ஸ்ரீ எம். எம். தண்டபாணி தேசிகர் | — பாட்டு |
| | ஸ்ரீ வி. சேதுராமையா | — பிடில் |
| | மதராஸ் ஸ்ரீ ஏ. கண்ணன் | — மிருதங்கம் |
| | ஸ்ரீ டி. எஸ். வில்வாத்திரி ஐயர் | — கடம் |
| **2**<br>24—12—50<br>ஞாயிற்றுக்கிழமை<br>மாலை 5-30 | ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் | — பாட்டு |
| | திருவள்ளூர் ஸ்ரீ சுப்பிரமணியம் | — பிடில் |
| | கல்பாத்தி ஸ்ரீ இராமநாதன் | — மிருதங்கம் |
| | ஸ்ரீ டி. எஸ். வில்வாத்திரி ஐயர் | — கடம் |
| **3**<br>25—12—50<br>திங்கட்கிழமை<br>மாலை 5-30 | ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதர் | — பாட்டு |
| | மைசூர் ஸ்ரீ டி. குருராஜப்பா | — பிடில் |
| | குத்தாலம் ஸ்ரீ சிவவடிவேல் பிள்ளை | — மிருதங்கம் |
| | ஆலங்குடி ஸ்ரீ இராமச்சந்திரன் | — கடம் |
| **4**<br>26—12—50<br>செவ்வாய்க்கிழமை<br>மாலை 5-30 | ஸ்ரீ டி. என். இராஜரத்தினம் பிள்ளை | நாதஸ்வரம் |
| | நாச்சியார்கோவில் ஸ்ரீ ராகவன் பிள்ளை | — தவில் |
| **5**<br>27—12—50<br>புதன்கிழமை<br>மாலை 5-30 | சரபேந்திர பூபால குறவஞ்சி — நாட்டிய நாடகம்<br>தயாரித்தவர் : தஞ்சை ஸ்ரீ கெ. பொ. கிருஷ்ணமூர்த்தி பிள்ளை<br>பங்கெடுத்துக் கொள்பவர்கள் : ஸ்ரீமதிகள் பாலசரஸ்வதி, ஹேமமாலினி, நிர்மலா, உமா, இந்திரா, சாந்தா, வசந்தா, கீதா முதலியோர்கள் இசை : ஸ்ரீமதிகள் ஜெயம்மா, ரங்கநாயகி | |
| **6**<br>28—12—50<br>வியாழக்கிழமை<br>மாலை 5-30 | ஆலத்தூர் சகோதரர்கள் | — பாட்டு |
| | கும்பகோணம் ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை | — பிடில் |
| | பழநி ஸ்ரீ எம். சுப்பிரமணிய பிள்ளை | — மிருதங்கம் |
| **7**<br>29—12—50<br>வெள்ளிக்கிழமை<br>மாலை 5-30 | ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலட்சுமி | — பாட்டு |
| | ஸ்ரீ ஆர். கே. வெங்கடராம சாஸ்திரி | — பிடில் |
| | கல்பாத்தி ஸ்ரீ இராமநாதன் | — மிருதங்கம் |
| | ஆலங்குடி ஸ்ரீ இராமச்சந்திரன் | — கடம் |
| **8**<br>30—12—50<br>சனிக்கிழமை<br>மாலை 5-30 | ஸ்ரீ மதுரை மணி ஐயர் | — பாட்டு |
| | ஸ்ரீ வி. கோவிந்தசாமி நாயக்கர் | — பிடில் |
| | இராமநாதபுரம் ஸ்ரீ சி. எஸ். முருகபூபதி | — மிருதங்கம் |
| **9**<br>31—12—50<br>ஞாயிற்றுக்கிழமை<br>மாலை 5-30 | ஸ்ரீ மதுரை எஸ். சோமசுந்தரம் | — பாட்டு |
| | கும்பகோணம் ஸ்ரீ சம்பந்தம் பிள்ளை | — பிடில் |
| | தஞ்சாவூர் ஸ்ரீ ஆர். இராமமூர்த்தி | — மிருதங்கம் |
| | உடுமலைப்பேட்டை ஸ்ரீ ஜி. மாரிமுத்தாப் பிள்ளை | — கஞ்சிரா |

(நிகழ்ச்சிகள் மாற்றத்திற்குரியன)

கட்டணம் : சீசன் முதல் வகுப்பு ரூ. 30 (வரிசேர்த்து உட்பட) இரண்டாம் வகுப்பு ரூ. 20

சீசன் டிக்கட்டுகள் தமிழ் இசைச் சங்க காரியாலயத்தில் (8/9, சிங்கண்ண நாயக்கன் தெரு, ஜார்ஜ் டவுன், சென்னை) கிடைக்கும்

மூன்று வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளுக்கு முழுக் கட்டணம் வசூலிக்கப்படும்

ஒலிபெருக்கி ஏற்பாடு : அசோசியேட்டட் ரேடியோ ஏஜன்ஸீஸ், தெப்பக்குளம், திருச்சி



மலர் 10 **கல்கி** இதழ் 18


# என்ன சேதி?

## புது மேயர்

பிரபலமான தந்தைக்குப் புதல்வரா யிருப்பதில் பல அநுகூலங்கள் இருந்தாலும் ஒரு பிரதிகூலமும் உண்டு. அத்தகைய புதல்வர் தாமாக ஒரு துறையில் பிரசித்த மடைவது சிரமமான காரியம். "இன்னாருடைய பிள்ளை" என்பதுதான் முன்னால் வந்து நிற்கும். தந்தை பிரபலமா யிருந்ததோடு தமையனும் பெயர் பெற்ற பிரமுகராயிருந்து விட்டால் கேட்க வேண்டியதில்லை. அப்படிப்பட்டவர் பிரபலமடைவதற்கு இரண்டு முட்டுக் கட்டைகள் ஏற்படுகின்றன. இத்தகைய இரண்டு முட்டுக்கட்டைகளையும் தாண்டி ஒருவர் பிரசித்தமடைவதற்கு அபாரமான விடாமுயற்சியும் திறமையும் வேண்டும். காலஞ்சென்ற செட்டிநாட்டு ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களின் புதல்வரும், ராஜா ஸர் முத்தையாச் செட்டியார் அவர்களின் இளைய சகோதரருமான ஸ்ரீ ராமநாதன் செட்டியார் அவர்கள் மேலே குறிப்பிட்ட அரும் பெரும் காரியத்தைச் சாதித்திருக்கிறார். தாமே பொது வாழ்க்கையில் ஈடுபட்டுச் சமூகத் துறையில் தொண்டு செய்து ஒரு முக்கியமான சிகர பதவியை அடைந்திருக்கிறார். சென்னைமாநகரின் மேயர் பதவியை இதற்கு முன் எவ்வளவோ பிரமுகர்களும் சமூகத் தலைவர்களும் தேசிய வீரர்களும் வகித்து அலங்கரித்திருக்கிறார்கள். அத்தகைய பதவிக்கு ஸ்ரீ ராமநாதன் செட்டியார் அவர்கள் இம்முறை பெருவாரியான அதிக வோட்டுக்களைப் பெற்றுத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். அவருக்கு நம் குதூகலமான வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம். "யார் மேயராக வந்தாலும் யார் அப்பதவியை விட்டுப் போனாலும் சென்னை நகரம் இருந்தபடியேதான் இருக்கிறது" என்னும் அபிப்பிராயம் பெரும்பாலான மக்களிடையே இருந்து வருகிறது. சென்னை நகரம் இருந்த இடத்திலேயே இல்லாமல் பறந்து போய் விடவா செய்யும்?—எனினும், நகரத்தின் அபிவிருத்திக்கும் நகர மக்களின் நல்வாழ்வுக்கும் உகந்த சில முக்கியமான காரியங்களை ஸ்ரீ ராமநாதன் செட்டியார் தம் பதவி காலத்தில் செய்து முடிப்பார் என்று எதிர்பார்க்கிறோம்.

## தீமையில் நன்மை!

கேரளப் பிரதேசத்தைச் சேர்ந்த சபரி மலையில் எழுந்தருளியிருக்கும் ஐயப்ப ஸ்வாமி கோவில் சில மாதங்களுக்கு முன் தீப்பிடித்துக் கொண்ட போது பக்தர்கள் பெரிதும் வருந்தினார்கள். அப்போது சாஸ்தா மூல விக்கிரகத்துக்கும் பின்னம் ஏற்பட்ட செய்தி அவர்களின் மனதைப் புண்படுத்தியது. அதிலும் மேற்படி தீச் செயல் வேண்டுமென்றே செய்யப்பட்டது என்று அறிந்து பக்தர்கள் துடி துடித்துப் பேராத்திரம் அடைந்தார்கள். அந்தச் சம்பவத்தைக் கேள்விப்பட்டதும் ஆயிரக் கணக்கான பக்தர்கள் மழையையும் குளிரையும் மனித சஞ்சாரமற்றக் காட்டுப் பிரதேசத்தையும் லட்சியம் செய்யாமல் சபரி மலைக்குச் சென்று பிரார்த்தனை செய்தார்கள். அந்தச் சம்பவம் திருவாங்கூர் சமஸ்தானத்திலும் தமிழ் நாட்டிலும் உள்ள பக்தர்களையெல்லாம் கலக்கி விட்டது. ஆயினும் என்ன? எந்தத் தீமையி



# சித்திரக் காட்சி

சென்னையில் நிரந்தர
மான தேசீயச் சித்
திரக் காட்சியை
நிறுவ உத்தேசித்
திருக்கிறார்கள்.
அதில் பல்வேறு
தரத்தினரும்
தத்தம்
மனோதர்மத்தின்படி
எழுதிய பின்வரும்
கற்பனைச் சித்திரங்
களுக்கு இடம்
தர வேண்டும்
என்று நமது
ஓவியக்காரர்
வற்புறுத்து
கிறார்.






















இந்தியா தம்மை அன்புடன் தாலாட்டும் தொட்டில் என்று நேபாள மகாராஜா நினைக்கிறார்.



னும் ஒரு நன்மை உண்டு என்று சொல்லுவார்கள் அல்லவா? அதுபோலவே மேலே குறிப்பிட்ட வருந்தத்தக்க சம்பவத்திலும் ஒரு நன்மை ஏற்பட்டிருக்கிறது!

## சரணம் ஐயப்பா!

சுமார் நானூறு ஆண்டுகளுக்கு முன் திருவாங்கூர் உள்ளிட்ட பாண்டிய நாட்டை ஆட்சி புரிந்து வந்த ராஜா ராஜசேகரனால் சபரிமலையில் ஐயப்பன் ஆலயம் நிர்மாணிக்கப்பட்டது. அன்றிலிருந்து இன்று வரையில் சபரிமலை லட்சக் கணக்கான பக்தர்களுக்குப் புனித யாத்திரை ஸ்தலமாக இருந்து வருகிறது. அத்தகைய ஆலயத்துக்குத் தீ வைத்ததன் மூலம், விக்கிரகத்தைப் பின்னப் படுத்தியதன் மூலம், துஷ்டர்கள் சிலர் தாங்கள் ஏதோ வெற்றி அடைந்து விட்டதாகக் கொக்கரிக்கலாம். எனினும் அதனால் ஐயப்ப மூர்த்தியின் மகிமை அணுவளவும் மங்கவில்லை; பக்தர்களின் உறுதி தினையளவும் குறையவில்லை.

சபரி மலைக்குச் செல்ல முடியாத கோடிக்கணக்கான தமிழ் மக்களுக்கு ஐயப்ப சுவாமியின் தரிசனம் கிடைப்பதற்காகச் சில பரம பக்தர்கள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அதற்காக ஸ்ரீ பி. டி. ராஜன் தலைமையில் சபரிமலை ஸ்ரீ ஐயப்பன் வரவேற்புக் கமிட்டியும் அமைக்கப்பட்டிருக்கிறது. தமிழ்நாட்டில் ஸ்ரீ ஐயப்ப ஸ்வாமியின் பவனி சென்ற 17-ந் தேதி ஆரம்பமாகியிருக்கிறது. 1951-ம் வருஷம் ஜனவரி மாதம் 9-ந் தேதி முடிவுறும் என்று தெரிகிறது. ஸ்வாமி ஐயப்பன் பவனி செல்லும் இடங்களில் எல்லாம் ஆயிரக்கணக்கான பக்தர்கள் "சுவாமியே சரணம் ஐயப்பா!" என்று பக்தி பரவசத்துடன் கோஷித்து இன்புறுகிறார்கள்.

ஐயப்ப சுவாமி பல ஊர்களுக்கும் பவனி சென்று பக்தர்களுக்குத் தரிசனம் கொடுத்து இம்மாதம் 11-ந்தேதி சென்னை நகருக்கு எழுந்தருளுகிறார். 16-ந் தேதி வரையில் இங்கு பவனி நடைபெறும். பக்தர்கள் திரளாகக் கலந்து கொண்டு திவ்ய தரிசனம் பெற்று ஐயப்ப மூர்த்தியின் அருளுக்குப் பாத்திரர் ஆவார்களாக!

## தமிழ் வீரர்களுக்கு ஜே!

"இந்த உலகத்திலே யாராலும் ஜெயிக்க முடியாத இரண்டு தளபதிகள் நம்மிடம் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் ஜெனரல் ஜனவரி; மற்றொருவர் ஜெனரல் பிப்ரவரி." இவ்வாறு ருஷ்யா சக்கரவர்த்தி ஜார் அடிக்கடி பெருமிதத்துடன் கூறுவது வழக்கமாம். குறிப்பாக ஜனவரி, பிப்ரவரி மாதங்களில் ருஷ்யாவிலே குளிர் யாராலும் சகிக்க முடியாது. எனவே, அப்போது ருஷ்யா மீது படையெடுக்க யாரும் துணிய மாட்டார்கள். ருஷ்யாவில் இரண்டு மாதம் தான் குளிர் சகிக்க முடியாமல் இருக்கும். ஆனால், குளிருக்கே உறைவிடமான ஹிமயமலைப் பிரதேசத்தில் உள்ள காஷ்மீரிலோ வருஷம் முழுதும் குளிர் சகிக்க முடியாது. அந்தப் பிரதேசத்தில் பிறந்து வளர்ந்தவர்களே அந்தக் குளிரைச் சகிக்க முடியாமல் கஷ்டப்படுவார்கள். அப்படியிருக்க, கடுங்குளிர் என்றால் என்ன என்பதையே அறியாத தமிழர்கள் அங்கு சென்றால் என்ன பாடு படுவார்கள் என்பதை ஊகித்துக் கொள்ளலாம்.

எனினும் நமது நாட்டின் இராணுவத்தைச் சேர்ந்த தமிழ் வீரர்கள் காஷ்மீருக்குச் சென்று குளிரை, இயற்கையை வென்றார்கள் என்றால் அது பெருமைப் படக் கூடிய விஷயம் அல்லவா? அதிலும் அவர்கள் இயற்கையை வென்றதுடன் அங்கு நடந்த போரில் மாபெரும் வெற்றியடைந்து இந்தியாவின் கௌரவத்தையும் தமிழர்கள் தொன்று தொட்டு தோள் வலிமை படைத்தவர்கள் என்ற புகழையும் பிரதாபத்தையும் நிலைநிறுத்தினார்கள் என்பதைப் பார்க்கும்போது பெரு மகிழ்ச்சி உண்டாகிறது.

காஷ்மீரில் பல மாதங்கள் வரை நடந்த யுத்தத்திலே இந்திய இராணுவத்தைச் சேர்ந்த சென்னை ரெஜிமெண்ட் வீரர்கள் முக்கிய பங்கு எடுத்துக்கொண்டு வெற்றி பெற்றனர். லெப்டினண்ட் கர்னல் ஜி. சேதுராமன் தலைமையில் வெற்றிமாலையுடன் திரும்பி வந்த அவ்வீரர்களுக்குச் சென்ற வாரம் சென்னை மகா ஜனங்கள் அமோக வரவேற்பு அளித்தார்கள். சந்தோஷ ஆரவாரத்தின் மூலம் தங்களுடைய பாராட்டுதலைத் தெரிவித்தார்கள். அவர்களின் சார்பில் சென்னை கார்ப்பொரேஷனும் வீரர்களுக்கு உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுத்துப் பெருமையைத் தேடிக் கொண்டது. சென்னை ரெஜிமெண்டு வீரர்கள் வாழ்க!



லெப்டினண்ட் கர்னல் சேதுராமன்

# காங்கிரஸின் கதி மோட்சம்

காந்தி மகாத்மா சொல்லியிருந்தபடி, பாரதநாடு சுதந்திரம் அடைந்ததும் காங்கிரஸ் மகாசபையைக் கலைத்து விட்டிருந்தால், உலக சரித்திரத்தில் வேறு எந்த ஸ்தாபனமும் அடையாத மேலான மோட்ச பதவியைக் காங்கிரஸ் அடைந்திருக்கும். இந்திய மக்களின் உள்ளங்களில் கல்ப கோடி காலம் கோயில் கொண்டு அமர வாழ்வை அடைந்திருக்கும். ஏனெனில் பாரத நாட்டுக்குக் காங்கிரஸ் செய்த சேவை அத்தகையது; உலகத்தில் வேறு எந்த நாட்டுக்கும் எந்த ஸ்தாபனமும் செய்யாதது. "கத்தியின்றி இரத்தமின்றி" முப்பத்தைந்து கோடி மக்கள் அன்னிய ஆட்சியிலிருந்து விடுபட்டுச் சுதந்திரம் அடைவது இலேசான காரியமா?

ஆனால் காந்திஜியின் விருப்பத்தின்படி, சுதந்திரம் வந்ததும் காங்கிரஸை நம் தலைவர்கள் கலைக்கவில்லை. அதற்குத் தகுந்த காரணங்களும் இருக்கத்தான் இருக்கும். எனினும், அவ்வாறு செய்யாததின் பயனாகச் சென்ற மூன்று வருஷங்களில் காங்கிரஸ் பல வித அபக்கியாதிகளை அடைந்திருக்கிறது. இதை யாரும் மறுப்பதற்கில்லை.

சில நாட்களுக்கு முன்பு ஒரு பிரசங்கி கலை விழா ஒன்றில் பேசினார். அவர் பேச எடுத்துக் கொண்டது சங்கீத சம்பந்தமான விஷயம். பேச்சின் இடையில், சட்டசபையில் நடைபெறும் முகாரி ராக ஆலாபனத்தைப் பற்றிக் குறிப்பிட்டார். அந்த ராகத்தில் பஞ்சப்பாட்டு என்னும் ஒரே பாட்டைப் பற்பல அங்கத்தினரும் பாடுவதாகச் சொன்னார். அந்தப் பஞ்சப் பாட்டின் பல்லவி, அநுபல்லவி, சரணங்களைப் பின் வரும் தோரணையில் கேள்வி பதிலாக எடுத்துக் கூறினார்:—

"ஊரெல்லாம் ஒரே பஞ்சமும் பட்டினியுமாயிருக்கிறது."

"ஏன் ஊரில் பஞ்சமும் பட்டினியுமாயிருக்கிறது?"

"ஜனங்களுக்குப் போதிய அரிசியோ வேறு உணவு தானியமோ கிடைக்கவில்லை."

"ஏன் கிடைக்கவில்லை?"

"நிலங்கள் நன்றாக விளையவில்லை"

"ஏன் நிலங்கள் நன்றாக விளையவில்லை?"

"போதுமான மழை பெய்யவில்லை!"

"ஏன் மழை பெய்யவில்லை?"

"கதர் கட்டிய காங்கிரஸ்காரர்கள் இவ்வளவு அக்கிரமங்கள் பண்ணினால் நாட்டில் மழை பெய்யுமா, ஐயா!"

இந்தக் கடைசி வாக்கியத்தைப் பிரசங்கி கூறியதும் சபையிலிருந்தவர்கள் அத்தனை பேரும் ஐந்து நிமிஷ நேரம் கரகோஷம் செய்து ஆரவாரித்தார்கள். ஏனெனில், அந்த வாக்கியம் அவர்களுடைய மனதில் இருந்ததைப் பிரதிபலிப்பதாயிருந்தது. இத்தனைக்கும், அந்தச் சபையிலிருந்தவர்கள் திராவிடக் கழகத்தினர் அல்ல; கம்யூனிஸ்டுகள் அல்ல; ஹிந்து மகா சபைக்காரர்கள் கூட அல்ல.

எல்லாரும் காங்கிரஸ் அநுதாபிகள்; மஞ்சள் பெட்டியில் வோட்டுப் போட்டவர்கள்: "காங்கிரஸுக்கு ஜே!" என்று தொண்டை கிழியக் கத்தியவர்கள். அவர்களில் பலர் கதர் கட்டிக் கொண்டிருந்தார்கள்.

ஆயினும், கதரும் காங்கிரஸும் மக்களின் மனோபாவத்தில் இத்தகைய நிலைக்கு வந்து விட்டன. மூன்று வருஷத்துக்குள்ளே தான் இந்த மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. இது முழுதும் நியாயமானது என்று நாம் கருதவில்லை. நாட்டில் மக்கள் அநுபவிக்கும் கஷ்டங்களுக்கெல்லாம் கதர் கட்டியவர்களும் காங்கிரஸ் காரர்களுமே காரணம் என்று நாம் ஒப்புக்கொள்ளவில்லை.

ஆயினும், தேசத்தில் நடந்து வரும் சிற்சில காரியங்கள் இத்தகைய மனோபாவம் ஏற்படுவதற்குக் காரணங்களாயிருந்து வருகின்றன.

பற்றாக் குறை ஒரு காரணம்; கண்ட்ரோல்களும் கண்ட்ரோல்களை அதிகாரிகள் அமுல் நடத்தும் முறையும் இன்னொரு காரணம்; ஸ்ரீ டி. பிரகாசத்தின் புகார்களைப் போல் காங்கிரஸ்வாதிகளே ஒருவர் மேல் ஒருவர் கேவலமான புகார்களைச் சொல்லித் தாக்குவது வேறொரு காரணம்.

மற்றொரு முக்கியமான காரணம், நாடெங்கும் காங்கிரஸ் ஸ்தாபனங்களுக்கு நடைபெற்ற தேர்தல்கள் சம்பந்தமான ஊழல்கள். இத்தகைய ஊழல்களுக்குக் காங்கிரஸின் புதிய அமைப்பு விதிகளே இடம் கொடுக்கின்றன என்பதை நாம் பல முறையும்

எடுத்துக் காட்டியிருந்தோம். ஆகையால் அந்த அமைப்பு விதிகளில் சிலவற்றை அவசியம் மாற்றவேண்டும் என்றும் வற்புறுத்தியிருந்தோம். காங்கிரஸ் பற்றுள்ள இன்னும் பலரும் எடுத்துச் சொன்னார்கள். இந்தக் கூப்பாட்டுக்கு ஓரளவு பலன் ஏற்பட்டிருப்பது என்பதைக் கண்டு நாடெங்குமுள்ள காங்கிரஸ் அபிமானிகள் ஓரளவு திருப்தியடைவார்கள்.

நாஸிக் காங்கிரஸிலேயே காங்கிரஸ் அமைப்பு விதிகளை உசிதமான முறையில் மாற்ற வேண்டுமென்ற பிரேரணை வந்து நிறைவேறியது. எந்தெந்த விதத்தில் அவ்விதிகளை மாற்றவேண்டும் என்பது பற்றிச் சென்ற வாரத்தில் கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மானம் செய்திருக்கிறது. அவற்றில் முக்கியமான திருத்தங்கள் வருமாறு:—

## திருத்தம் 1.

இப்போதுள்ள காங்கிரஸ் அமைப்பு விதிகளின்படி, காங்கிரஸ் அங்கத்தினர்களில் மூன்று வகை உண்டு:

1. கைநாட்டு அங்கத்தினர்கள் 2. வெட்டி அங்கத்தினர்கள் 3. 'வேலைத்தன' அங்கத்தினர்கள்.

யார் வேணுமானாலும் கைஎழுத்துப் போட்டு முதல் வகை அங்கத்தினராகலாம். சந்தா கிடையாது. நிபந்தனை கிடையாது. வேறு ஒரு பொறுப்பும் கிடையாது.

வெட்டி அங்கத்தினர் வருஷத்துக்கு ஒரு ரூபாய் சந்தா கொடுக்கவேண்டும்.

'வேலைத்தன' அங்கத்தினர் ஏதாவது ஒரு நிர்மாண வேலையில் ஈடுபட்டிருக்க வேண்டும் என்பதாக ஐதீகம்.

இந்த மூன்று வகை அங்கத்தினரும் சேர்ந்தோ, சேராமலோ, குட்டை குழப்பித் தேர்ந்தெடுப்பவர்கள் காங்கிரஸ் பஞ்சாயத்தார்கள்.

இந்தப் பஞ்சாயத்தார்கள் ஒவ்வொரு தொகுதியிலும் பத்து முதல் அறுபது வரையில் இருப்பார்கள்.

தொகுதி ஏற்படுத்தும்போதே இன்னின்ன ஆசாமிக்காக இன்னின்ன தொகுதி என்று வகுத்து ஏற்படுத்தி விடுவார்கள்.

ஆனாலும் பல தொகுதிகளிலும் போட்டி ஏற்படும். ஏனெனில் பஞ்சாயத்து அங்கத்தினர்தான் மாகாணக் கமிட்டி அங்கத்தினரைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

ஆகையால் பஞ்சாயத்து அங்கத்தினரை ஒவ்வொரு தொகுதியிலும் மாகாணக் கமிட்டி அங்கத்தினராக விரும்புவோர் ரொம்ப அபேட்சிப்பார்கள்.

காங்கிரஸ் தேர்தல் ஊழல்களுக்கெல்லாம் நிலைக்களமாயிருந்தது இந்தப் பஞ்சாயத்துக்கள்தான்.

பஞ்சாயத்தார்களிடம் வோட்டு வாங்குவதற்காகப் பல விதத்திலும் அவர்களைத் தாஜா பண்ணினார்கள். ஒவ்வொரு அங்கத்தினருக்கும் ஒரு கார் ஏற்படுத்தியவர் உண்டு. பஞ்சாயத்தார்களைக் கொண்டுவந்து பவுண்டில் அடைப்பது போல் அடைத்து வைத்தவர்கள் உண்டு. லஞ்சப் பேய் தாண்டவமாடியது பற்றி எத்தனையோ வதந்திகள். இவ்வளவுக்கும் பஞ்சாயத்து முறை இடம் கொடுத்தது.

இந்தப் பஞ்சாயத்து ஏற்பாட்டை ரத்து செய்து விடுவது என்று காரியக் கமிட்டியார் தீர்மானித்திருப்பது மிகவும் மகிழ்ச்சிகரமான விஷயம்.

இனி, காங்கிரஸ் அங்கத்தினர்கள் நேர்முகமாகவே ஜில்லா — மாகாணக் கமிட்டிகளுக்கு அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுப்பார்கள்.

இரண்டே விதக் காங்கிரஸ் அங்கத்தினர்கள் இருக்கவேண்டும் என்றும் காரியக் கமிட்டி சிபார்சு செய்திருக்கிறது. (1) ஒரு ரூபாய் சந்தா கொடுக்கும் அங்கத்தினர்கள்; (2) ஏதாவது ஒரு நிர்மாண வேலை செய்யும் அங்கத்தினர்கள்.

இரண்டாவது வகை அங்கத்தினர்தான் மாகாணக் கமிட்டிக்கும் மற்ற ஜில்லா — பிர்க்கா கமிட்டிகளுக்கும் அபேட்சகர்களாக நிற்கலாம். முதல் வகை அங்கத்தினர் வோட்டுக் கொடுக்க உரிமையுள்ளவர்கள்.

இதிலும் ஒரு குறைபாடு இல்லாமற் போகவில்லை. நிர்மாண வேலை செய்பவர் என்று யார் அத்தாட்சி கொடுப்பது? யார் அங்கீகரிப்பது? இதில் சில அநீதிகள் நடக்கக் கூடும். ஆனால் பஞ்சாயத்து ஏற்பாட்டில் நடந்தது போல் அவ்வளவு பயங்கரமான ஊழல்களுக்கு இதில் இடமில்லை.

## திருத்தம் 2.

காங்கிரஸ் நிர்வாக சபைகளுக்கு ஒரு முறை தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் மூன்று வருஷம் பதவியிலிருக்கலாம் என்பது பழைய ஏற்பாடு.

மூன்று வருஷத்தை இரண்டு வருஷமாகச் செய்யவேண்டும் என்று காரியக் கமிட்டி சிபார்சு செய்திருக்கிறது. மிக்க வந்தனம். ஊழல் பஞ்சாயத்துக்களின் மூலம் ஏற்பட்ட ஊழல் கமிட்டிகளின் ஆயுள் ஒரு வருஷம் குறைந்தால் அதுவே ஒரு பெரிய சீர்திருத்தம் அல்லவா? இரண்டு வருஷத்தில் இப்போதுள்ள கமிட்டிகள் மாறிப் புதிய தேர்தல் முறைப்படி கொஞ்சம் நல்ல கமிட்டிகள் இரண்டு வருஷத்திற்குப் பிறகாவது ஏற்படலாம் அல்லவா?

## திருத்தம் 3.

தேர்தல் ஊழல்களைப் பற்றிய புகார்களை விசாரிப்பதற்கு இதுவரையில் ஜில்லா டிரிபுனல்களும் மாகாண டிரிபுனல்களும்தான் இருந்தன. இவற்றின் அமைப்பும் சரி, நியாயத் தீர்ப்பும் சரி, அவ்வளவு திருப்திகரமாக இருப்பதில்லை. டிரிபுனல் அங்கத்தினர்கள் பாரபட்சமில்லாதத் தீர்ப்பு அளிக்கக் கூடியவர்கள் என்ற நம்பிக்கை ஏற்படும் முறையில் மேற்படி டிரிபுனல்கள் அமைவதில்லை.

இப்போது அகில இந்திய டிரிபுனல் ஒன்று ஏற்படுத்துவதென்ற தீர்மானம் செய்திருக்கிறார்கள். கீழே உள்ள டிரிபுனல்கள் அநியாயத் தீர்ப்புக்களைச் செய்தால், மேலே சென்று பரிகாரம் தேடலாம் என்ற நம்பிக்கை ஏற்படக்கூடும்.

மாகாண டிரிபுனல்கள் ஏற்படுத்தும் விதிகளையும் ஓரளவு திருத்தி அமைக்கச் சிபார்சு செய்திருக்கிறார்கள்.

## திருத்தம் 4.

பஞ்சாயத்து ஊழல்களுக்கும், மாகாணக் கமிட்டிகளைக் கைப்பற்றுவதில் காட்டப்பட்ட பரபரப்புக்கும் அடிப்படையான காரணம் என்ன?

எல்லாம் வரப்போகும் புதிய சட்டசபைத் தேர்தலை முன்னிட்டுத்தான்.

மாகாணக் கமிட்டியைக் கைப்பற்றினால் சட்டசபைக்குப் போவது சன்னலாகும் என்றும், அங்கிருந்து மந்திரி பதவியை எட்டிப் பிடிக்கலாம் என்றும் பலரும் ஆசைப்பட்டார்கள். எனவே படாதபாடு பட்டு, பலவித உபாயங்களையும் கையாண்டு மாகாணக் கமிட்டி அங்கத்தினராக முயன்றார்கள்.

இதெல்லாம் நாஸிக் காங்கிரஸுக்கு முன்னாலேயே தேசமெங்கும் வெட்ட வெளிச்சமாகத் தெரிந்து போயிருந்தது. இந்த நிலைமையைக் கண்டு பண்டித ஜவாஹர்லால் நேரு வருந்தினார். காங்கிரஸைத் தூய்மைப் படுத்துவதற்காக ஓர் அடிப்படையான சீர்திருத்த யோசனையைச் சொன்னார். அதாவது சட்டசபைகளுக்கு அபேட்சகர் நியமிக்கும் பொறுப்பைக் காங்கிரஸ் ஸ்தாபனத்துக்கு இல்லாமல் செய்து, அதற்கென்று தனியாக முக்கிய தலைவர்கள் அடங்கிய ஓர் அமைப்பை ஏற்படுத்தி விடலாம் என்றார். இவ்விதம் செய்து விட்டால், காங்கிரஸ் ஸ்தாபனத்தைக் கைப்பற்றுவதில் இவ்வளவு போட்டா போட்டியும் பரபரப்பும் லஞ்ச ஊழலும் ஏற்பட இடமில்லை என்று எடுத்துக் காட்டினார்.

துரதிர்ஷ்டவசமாக, ஜவாஹர்லாலின் இந்த யோசனையைக் காங்கிரஸ் காரியக் கமிட்டி ஏற்றுக் கொள்ளவில்லை. இதில் வியப்பு அடையவும் இடமில்லை.

ஏனெனில், ஜவாஹரின் மேற்படி யோசனையை சர்தார் பட்டேல் எதிர்த்தார் என்பது பகிரங்க இரகசியம்.

அதோடு, மிகப் பிரயாசைப் பட்டுக் காங்கிரஸ் அக்கிராசனராக வந்திருக்கும் ராஜரிஷி டாண்டனும், அவரால் நியமிக்கப்பட்ட காரியக் கமிட்டி அங்கத்தினரும் தங்களிடமுள்ள இந்த முக்கியமான அதிகாரத்தையும் உரிமையையும் விட்டுக் கொடுத்து விடுவார்களா? மாட்டார்கள்தான்.

ஆகவே, காரியக்கமிட்டி நியமிக்கும் பார்லிமெண்டரி போர்டைச் சேர்ந்த ஐந்து அங்கத்தினரும், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி தேர்ந்தெடுக்கும் மற்ற ஐந்து அங்கத்தினரும் சேர்ந்து மத்திய தேர்தல் கமிட்டியாகும் என்ற பழைய ஏற்பாட்டையே ஊர்ஜிதம் செய்திருக்கிறார்கள்.

ஆனால் மாகாண தேர்தல் கமிட்டி நியமிக்கும் விஷயத்தில் மட்டும் ஒரு சிறிய திருத்தம் செய்திருக்கிறார்கள்.

அதாவது ஒவ்வொரு மாகாணத்திலும் மூன்று முதல் ஐந்து வரை அங்கத்தினர் கொண்ட தேர்தல் கமிட்டியை மாகாண காங்கிரஸ் கமிட்டியில் அமைக்கவேண்டும். மேற்படி தேர்தல் கமிட்டிக்கு நியமிக்கப்படும் ஒவ்வொருவரும் மாகாணக் கமிட்டி அங்கத்தவரின் மூன்றில் இரண்டு பங்குப் பேரின் வோட்டுப் பெற்றிருக்க வேண்டும். அதாவது மாகாணக் கமிட்டி அங்கத்தினரில் மிகப் பெரும்பாலானவர்களின் ஆதரவைப் பெற்றவர்களாயிருக்கவேண்டும்.

இது நல்ல திருத்தந்தான் என்பதில் ஐயமில்லை. ஆனால் இதனாலேயே பிரமாதமான பலன் ஏற்பட்டுவிடும் என்று சொல்ல முடியாது.

ஏனெனில், இப்போது ஏற்பட்டிருக்கும் மாகாணக்கமிட்டிகள், கீழே ஊழல் நிறைந்த பஞ்சாயத்துகளினால் தேர்ந்தெடுக்கப்பட்டவை. ஆகவே நாற்றுக்கு ஐம்பத்தோரு பேர் வீதம் வோட்டுக் கொடுத்து அமைக்கும் தேர்தல் கமிட்டிக்கும், நாற்றுக்கு 66 பேர் வோட்டுக் கொடுத்து அமைக்கும் தேர்தல் கமிட்டிக்கும் அப்படி என்ன பெரிய வித்தியாசம் இருந்து விட முடியும்?

மத்திய தேர்தல் கமிட்டி நல்ல முறையில், நல்ல சிறந்த நேர்மையான தலைவர்களைக் கொண்டதாய் அமைந்தால் மட்டுமே வரப்போகும் சட்டசபைத் தேர்தல்கள் ஓரளவு ஒழுங்காய் நடக்கும் என்று எதிர்பார்க்கலாம்.

புதிய தேர்தலில் அறிவாளிகளும் தியாகிகளும் ஒழுக்க சீலர்களும் திறமையாளர்களும் சட்டசபைகளுக்கு வருவதைப் பொறுத்தே நாம் சுயராஜ்யம் அடைந்தது சபலமாகும். தேசத்துக்கு முன்னால் உள்ள மகத்தான பிரச்னைகளைத் தீர்த்து வைக்க முடியும். நாட்டின் சுதந்திரத்துக்கு ஏற்படக் கூடிய பேரபாயங்களை எதிர்த்து வெற்றி பெறவும் கூடும்.

* * *

பொதுவாக, காங்கிரஸ் அமைப்பு விதிகளில் திருத்தங்கள் அவசியம் என்பதை ஒப்புக் கொண்டு அத்துறையில் காங்கிரஸ் காரியக் கமிட்டி முயற்சி எடுத்திருப்பதைப் பாராட்டுகிறோம். பின்னால் ஏற்படும் அநுபவங்களைக் கொண்டு மேலும் அவசியமான திருத்தங்களையும் கொண்டுவந்து நிறைவேற்றுவார்கள் என்று நம்புகிறோம்.

இத்தகைய சீர்திருத்தங்களைத் துரிதமாகச் செய்து முடித்தால், ஆசாரிய கிருபளானி போன்றவர்கள் காங்கிரஸுக்குள் தனி கோஷ்டி ஏற்படுத்துவதையும் அல்லது பிரிந்து வெளியேறுவதையும் பற்றிப் புனராலோசனை செய்யக்கூடும். புனிதமான காங்கிரஸ் ஸ்தாபனத்துக்குச் சமீப காலத்தில் ஏற்பட்டிருக்கும் அபக்யாதி குறையும் என்றும் எதிர்பார்க்கலாம்.

# அக்கப் போர்

சிறையில் ரேஷன் குறைக்கப்பட்டதனால் தண்டனை அனுபவித்து வரும் பன்னிரண்டு கைதிகள் மரத்தின் மீது ஏறிக்கொண்டு பல மணி நேரம்வரை இறங்காதிருந்தார்களாம்.

—பீகார் செய்தி

உணவு மந்திரி கனம் முன்ஷி நட்ட மரங்களெல்லாம் வளர்ந்துவிட்டால் இந்திய மக்கள் எல்லாருமே மரக்கிளைகளில் ஏறி. உட்கார்ந்து சத்தியாக்கிரகம் செய்யலாம்.

★

காலஞ்சென்ற நாடகாசிரியர் ஷாவின் அஸ்தி அவருடைய விருப்பப்படியே, அவர் வசித்து வந்த வீட்டுத் தோட்டத்தில் தெளிக்கப் பட்டதாம்!

இனி, ஷாவின் வீட்டுத் தோட்ட மரங்கள் நாடகம் இயற்றினால் ஆச்சரியப்படுவதற்கில்லை!

★

பெங்களூருக்குச் சென்று கொண்டிருந்த ஒரு விமானம் காவேரிக் கரையில் பலவந்தமாக இறங்கிவிட்டது. —ஒரு செய்தி

அந்த விமானத்தில் இருந்த பிரயாணி ஒருவர் 'பொன்னியின் செல்வன்' கதையைப் படித்ததே இதற்குக் காரணம் என்ற வதந்தியில் ஆதாரம் இருக்கலாம்!

★

"ஸ்ரீ பிரகாசத்தின் குற்றச்சாட்டுகள் எல்லாம் பழையவையே, புதிதாக ஏதும் இல்லை" என்று சென்னைப் பிரதமர் கூறினார். —செய்தி

"பழையன கழிந்தால்தானே புதியன புகும்" என்று ஸ்ரீ பிரகாசம் பதில் கூறலாம்.

★

வியாசர்பாடியில் உள்ள கான்ஸ்டபிள் ரோடில் ஒரு புரொபஸர் வழிப்பறி செய்யப்பட்டாராம். அவர் உடனே போலீஸ் ஸ்டேஷனில் ரிப்போர்ட் செய்தார். இரண்டே மணி நேரத்தில் குற்றவாளிகள் கண்டு பிடிக்கப் பட்டு விட்டார்களாம்.

நமது நகர சபையார் இனிமேல் தெருக்களின் பெயரை மாற்றும்போது, சார்ஜண்ட் சந்து, இன்ஸ்பெக்டர் தெரு, சர்க்கிள் இன்ஸ்பெக்டர் சாலை என்பது போன்ற பெயர்களையே வைப்பார்களாக!

★

கடந்த ஒரு வருஷத்தில் இந்தியாவுக்குச் சாதகமான வர்த்தக மிச்சம் ஏற்பட்டிருக்கிறது. இறக்குமதியைவிட ஏற்றுமதி ரூ. 9½ கோடி அதிகம்.

நமது வரவு செலவு மந்திரிக்கு நிம்மதி அளிக்கும் செய்திதான் இது!

பட்டுத் தொழிற்சாலையில் தீ.

—ஒரு செய்தித் தலைப்பு

தீயைச் சிரமப்பட்டு அணைத்திருப்பார்கள் என ஊகிக்கலாம்.

★

சணல் வாணிபத்தை அரசாங்கம் ஏற்காது.

—டில்லி அறிக்கை

ஏற்காததற்குச் சர்க்காரிடம் ஏதாவது நல்ல சாக்கு இருக்கும்!

★

பத்தொன்பது . கைதிகளுக்கு மலான் சர்க்கார் தூக்கு. —ஒரு தலைப்பு

தென் ஆப்பிரிக்கப் பிரதமர் மலான் கைதிகளைத் தூக்கிலிடுவது கிடையாது என்று இனிமேல் யாரும் புகார் சொல்ல மாட்டார்களென நினைக்கிறோம்.

★

சினிமாத் தியேட்டர்களில் புகை பிடிக்கிறவர்களைத் தடை செய்ய சென்னை சர்க்கார் சட்டம் இயற்றப் போகிறார்களாம். —செய்தி

புகை பிடிக்கிறவர்களுக்கு இந்தச் சட்டம் நிச்சயமாகப் பிடிக்காது!

★

இந்தியாவிலும், பாகிஸ்தானிலுமுள்ள திட்டுப் பிரதேசங்களைப் பரிவர்த்தனை செய்வது பற்றிப் பேச்சு வார்த்தைகள் நடந்து வருகின்றன.

—செய்தி

பேச்சு வார்த்தைகள் திட்டுகளாகப் பரிணமிக்காமல் இருக்க வேண்டும்!

இன்ஸ்பெக்டர் :— என்னப்பா! கீதையில் ஏதாவது ஒரு சுலோகம் உனக்குத் தெரியுமா?

பையன் :—தெரியாது, ஸார்!

இன்ஸ்பெக்டர் :— தெரியாதா? உன் பெயர் என்ன?

பையன் :—என் பெயர் கிருஷ்ணன் ஸார்!


கம்யூனிஸ்டுகள்
அமெரிக்கா
கழுகும் கரடியும் கொரியாவில் கொடிய விரோதியான பனியைச் சமாளிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது.
தென்னாப்பிரிக்கா
ஒட்டகச் சிவிங்கி மற்றொருவர் உணவைத் தின்கையில் ஐ. நா சபை தாங்காமல் தூங்குகிறது.
தென்மேற்கு ஆப்பிரிக்கா
ஐ. நா சபை
ராணா சர்க்கார்
நேபாளத்தில் காண்டா மிருகம் அட்டகாசம் செய்து வருகிறது.
SHASTRY

# வட்ட மேஜை

## ★ கொழும்பு ஹோட்டல்கள்

இலங்கையில் அதுவும் முக்கியமாகக் கொழும்பில்தான் ஹோட்டல் சாப்பாட்டை நம்பி வாழும் மக்கள் அதிகமாக இருக்கின்றனர். கொழும்பிலே நடத்தப்படும் சைவ உணவு கொடுக்கப்படும் சாப்பாட்டுக் கடைகளுக்குப் பொதுவாக "பிராமண ஹோட்டல்"கள் என்ற பெயரே வழங்கப்பட்டு வருகின்றன. அதாவது அப்படியான பெயர்களைத் தாங்கிய விளம்பரப் பலகைகள்தான் அந்த ஹோட்டல்களை அலங்கரிக்கின்றன.

பெயரளவில் சைவ உணவு கொடுக்கப்படும் ஹோட்டல்களே யல்லாது உணவு தயாரிக்கும் முறையிலோ சுத்தத்திலோ சைவ ஒழுங்கைக் காண முடியாது.

தேனீர் பரிமாறப்படும் கோப்பைகளும், கண்ணாடி டம்ளர்களும் சரியாகக் கழுவப்படுவதில்லை. வாய் வைத்துத் தீண்டிய கண்ணாடி டம்ளர்களும், வாயில் படாது சாப்பிடும் பித்தளை டம்ளர்களும் ஒரே பாத்திரத்தில் உள்ள நீரில் அமிழ்த்தப்பட்டு அடுக்கப்படும். இப்படிச் செய்தவுடன் டம்ளர் கழுவியாய்விட்டதாகக் கருதப்படும்! இதை எடுத்துக் கூறினாலும் ஹோட்டல் சிப்பந்திகளோ முதலாளிமார்களோ காதில் வாங்கிக் கொள்வதில்லை. மற்றும் பரிமாறுபவர்கள் எல்லாம் அருவருக்கத்தக்க முறையில் அழுக்குப் படிந்த கையினால் உணவுப் பொருள்களைப் பரிமாறுகின்றனர்.

பெரும்பாலான ஹோட்டல்களை இந்தியர்கள்தான் நடத்துகின்றனர். இவற்றுள் ரெட்டியார்கள் நடத்தும் 'பிராமண' ஹோட்டல்கள்தான் அதிகம்.

இப்படியான ஹோட்டல்களில் தமிழர் சாப்பிட விரும்பாவிடினும் சைவ உணவுக்காகச் சாப்பிடவேண்டி இருக்கின்றது. சாப்பாட்டில் கல்லும் மண்ணும் அதிகமாக இருக்கின்றது. இவற்றை யெல்லாம் கவனித்த சிங்களச் சகோதரர்கள் தமிழர்களைக் கேலி பண்ணுகிறார்கள். "எங்கள் ஹோட்டல்களில் மச்சமாமிசம் சமைக்கப்பட்டாலும் பார்வைக்குச் சுத்தமாய் இருக்கின்றது. உங்கள் சைவக் கடைகளில் புளித்த மணமும், கல்லும் மண்ணும் சேர்ந்த சாப்பாடும், வெறும் சாக்கடை நீர் போன்ற தேனீரும், எச்சில் இலையும் நிறைவிடமாக இருக்கின்றதே" என்று பல முறையும் இடித்துக் கூறுகின்றனர். வெட்கத்தைப் பொறுக்க முடியாமல் நிறைவேண்டி யிருக்கின்றது. இந்தியர் மட்டமானவர்கள் சுத்தமுள்ளவர்கள் என்ற அபிப்பிராயத்தைப் போக்கி, தமிழர் ஆதிதொட்டுப் பரிசுத்த வாழ்வு வாழ்ந்தோ மென்ற எண்ணத்தைச் சிங்களச் சகோதரர் மனதில் பதியக் கூடிய விதம் கொழும்பு ஹோட்டல் முதலாளிகள் தங்கள் ஹோட்டல்களை நடத்த முயற்சிப்பார்களா?

கொழும்பு
18—11—50

சி. சண்முகநாதன்.

○●○

## ★ பௌத்த இலங்கை

மதத்தின் பெயரால் சமீபகாலத்தில் நடந்துள்ள அக்கிரமங்களை நாம் நன்கறிவோம். அரசியலையும் மதத்தையும் கலப்பதனால் ஏற்படக்கூடிய தீங்குகளை உலக சரித்திரம் மிகத் தெளிவாக விளக்கிக் கொண்டிருக்கிறது.

இக் நிலையில் இன்று இலங்கையின் மந்திரிகளுள் ஒருவரான திரு எஸ். டபிள்யூ. ஆர். டி. பண்டாரநாயகா அவர்கள் பௌத்த மதத்தை இலங்கையின் அரசாங்க மதமாகப் பிரகடனப்படுத்த வேண்டுமென்று பெருங்கிளர்ச்சி செய்து வருவது வெறுக்கத் தக்கதாகும். ஆனால் அவர் இக் கூச்சலைக் கிளப்பியிருப்பதன் காரணம் எவருக்கும் நன்கு புலனாகும். அடுத்த பொதுத் தேர்தல் சமீபித்துக் கொண்டிருப்பதால், மக்களின் ஆதரவைப் பெறுவதற்காகப் பெரும்பான்மையோரின் மதமான பௌத்த மதத்தை இரட்சிப்பதாகக் கூறுவது ஓர் அரசியல் தந்திரம்.

சில தினங்களுக்கு முன் குருணாகலையில் நடந்த ஒரு கூட்டத்தில் திரு பண்டார நாயகா "பௌத்த மதத்தை இலங்கை அரசாங்க மதமாக்குதல் முறையல்லவென்று சொல்கிறவர்கள் அங்கொடை (பைத்தியக்கார) ஆஸ்பத்திரிக்குத்தான் அனுப்பப்படவேண்டும்" என்று மிகுந்த ஆத்திரத்தோடு கூறியுள்ளார்.

சில காலமாக இவரும், இவர் போன்ற இன்னும் சிலரும் செய்து வரும் பிரசாரத்தைத் தொடர்ந்து நீர்கொழும்பு, களனி போன்ற பகுதிகளில் பல நபர்கள் மதமாற்றம் செய்யப்பட்டுள்ளார்கள். இதன் விளைவாக ஏற்பட்டுள்ள மனக் கசப்புக்களைச் சொல்லி முடியாது.

இம் மந்திரியின் அபூர்த்தக் கொள்கைக்கு மந்திரி சபையில் எவ்வித ஆதரவுமில்லை. சமீபத்தில் மன்னாரில் பேசிய போக்குவரத்து மந்திரி திரு கொத்தலாவல அவர்கள் "இலங்கை சிங்களவர், தமிழர், முஸ்லிம்கள், பரங்கியர் ஆகிய நான்கு சமூகத்தினருக்கும் உரித்தான ஒரு நாடு. 'சனநாயக முறைப்படி, எந்த ஒரு கட்சியும் தனது கொள்கைகளைப் பிறர் மீது சுமத்தக் கூடாது' என்ற அரசியல் நோக்குடையது எங்கள் யூ. என். பி. கட்சி. எனவே நானும் பிரதமர் சேனநாயகாவும் இக் கட்சியில் உள்ளவரை எந்த மதத்தையும் அரசாங்க மதமாக்க இணங்கமாட்டோம்" என்று கண்டிப்பாகக் கூறியுள்ளார்.

---

★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 25, "கொழும்பு ஹோட்டல்கள்" என்ற கடிதம் எழுதிய ஸ்ரீ சி. சண்முகநாதனுக்கும், "பௌத்த இலங்கை" என்ற கடிதம் எழுதிய ஜனாப் எஸ். எம். கமால்தீனுக்கும் ரூ. 12—8—0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.

இதிலிருந்து திரு பண்டாரநாயகாவின் போக்கு அர்த்தமற்றதென்றும், அவர் தமது அரசியல் முன்னேற்றத்துக்காகவே இத்துறையில் இறங்கியுள்ளாரென்பதும் தெளிவாகிறது.

பாராளுமன்ற அரசியல் திட்டப்படி மந்திரி சபையினர் தமக்குள் அபிப்பிராய பேத முடையவரா யிருத்தல் முறையன்று. அப்படி அபிப்பிராய முரண்பட்டவரை மந்திரி சபையிலிருந்து நீக்கி விடப் பிரதமருக்கு அதிகார முண்டு.

ஆனால் இதுவரை எமது பிரதமர் மௌனம் சாதித்து வருகிறார். 'மௌனம் கலக நாஸ்தி' போதும்! ஆனால் பாமர மக்கள் திரு பண்டார நாயகா போன்றோரின் பிரசாரங்களினால் வீணாய் அல்லல்படாமலிருப்பதற்குக் காலந் தாழ்த்தாது நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம்.

கொழும்பு
18—11—50 எஸ். எம். கமால்தீன்.

○●○

## பரிதாப நிலை

சென்னை மாகாணத்தில் விவசாயத்திற்கு அடுத்தபடி பெருவாரியான மக்கள் செய்து வருகின்ற தொழில் கைத்தறி நெசவு என்பதை யாவரும் அறிவர். சுமார் 32 லட்சம் ஏழைக் குடும்பங்கள் கைத்தறி நெசவுத் தொழிலின் மூலம் ஜீவித்து வருகின்றனர். இவர்களின் வாழ்க்கையில் வீசும் வறுமைப் புயலைப் போக்க நமது சர்க்கார் நாடாள வந்த நாள் முதல் இன்று வரை ஏதாவது செய்திருக்கிறார்களா?



"அடாடா! இந்தக் கண்ணாடியை யாரோ உடைத்து விட்டார்களே! இந்த மாதிரிக் கண்ணாடி ரூபாய் பத்து கொடுத்தால்கூடக் கிடைக்காதே!"

"கிடைக்காமல் என்ன, ஸார்?"

"இரண்டு ரூபாய் பந்தயம் வைக்கிறேன். இந்தக் கண்ணாடி மாதிரி கிடைக்கவே கிடைக்காது."

"இதன் விலையே மூன்று ரூபாய் தான், ஸார்!"

"அப்படியா? அப்படியானால் இந்தாருங்கள் மூன்று ரூபாய், என் பையன்தான் இதை உடைத்தான். நீங்கள் பத்து ரூபாய்க்குப் பில் அனுப்பி யிருந்தீர்களே!"

30—7—48 வரை சென்னை மாகாணத்தில் உற்பத்தியான கைத்தறித் துணிகளை பர்மா, மலேயா, பினாங்கு, சிங்கப்பூர், ஆப்ரிக்கா, பாகிஸ்தான் முதலிய அயல் நாடுகளுக்கு யாதொரு தடையுமின்றி ஏற்றுமதி செய்ய உரிமை இருந்து வந்தது. இந்த உரிமை 1—3—49 முதல் இந்திய சர்க்காரால் பறிக்கப்பட்டு பெர்மிட் முறை என்று ஒரு பாதக முறை கொண்டுவரப்பட்டது. இந்த பெர்மிட் முறையினால் நாளுக்கு நாள் கைத்தறித் துணிகள் தேங்குகின்றன. நெசவுத் தொழிலாளி 'நெய்த துணியை வாங்குவார் இல்லையே' என்று ஏங்குகிறான். அவன் குடும்பம் பசியால் ஏங்குகின்றது.

இந்தச் சந்தர்ப்பத்தை நூல் மில் முதலாளிகள் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டு உற்பத்தியாகின்ற பலரக நூல் பேல்களையும் அதிக லாபத்திற்கு வெளி நாட்டிற்கு ஏற்றுமதி செய்கின்றனர். நூல் மில் முதலாளிகளின் கொள்ளை லாபப் பேராசையினால் லட்சக் கணக்கான நெசவுத் தொழிலாளர்கள் நெய்ய நூல் கிடைக்காமல் ஊர்விட்டு ஊர் சென்று தங்கள் மானத்தை விட்டுப் பச்சை எடுக்கின்றனர். சேலத்திலே நெசவுத் தொழிலாளர் குடும்பங்கள் வாழ வகை தெரியாமல், சேர்வராயன் மலை சென்று விறகுச் சுமை சுமந்து வந்து, விற்றுக் கூலி ஜீவனம் செய்துபிழைக்கின்றனர். வேர்க்கடலை, புளியங்கொட்டை இவைகளைத் தின்று உயிர் வாழ்கின்றனர். இவை போன்ற பரிதாப நிலைகள் பலப்பல நாட்டிலே நித்திய நிகழ்ச்சியாகிவிட்டன.

நமது மக்கள் சர்க்கார் இங்கு நர்த்தனமாடும் பசிக் கொடுமை, பட்டினிச் சாவுகளிலிருந்து காப்பாற்ற வேண்டுமானால் உடனடியாகத் தேங்கிக் கிடக்கும் கைத்தறித் துணிகளை எவ்வித பர்மிட் கட்டுப்பாடுமின்றி வெளிநாட்டிற்கு ஏற்றுமதி செய்ய அனுமதி கொடுக்க வேண்டும். நம் நாட்டுக் கைத்தறிகளுக்குத் தேவையான நூல் பேல்கள் தந்து, எஞ்சியுள்ள நூல் பேல்களைத் தான் மில் முதலாளிகள் ஏற்றுமதி செய்ய அனுமதி கொடுக்க வேண்டும்.

சேலம்
16—11—50 தி. ஒபுளிசாமி

○●○

## கல்லூரிப் படிப்பு

நமது தென்னாட்டில் பல இளைஞர்கள் நன்றாகப் படிக்கும் ஆற்றல் பெற்றிருந்தும், ஏழ்மையின் காரணமாகத் தங்கள் படிப்பிற்குப் பள்ளிப்படிப்புடன் முற்றுப் புள்ளி வைத்துவிட்டு, பொருளீட்டும் துறையில் இறங்கிவிடுகிறார்கள். பம்பாய் சர்க்கார் பம்பாயில் இந்தக் குறையை நீக்க ஒரு சாதனம்—சந்தர்ப்பம்—அளித்துள்ளார்கள். அதாவது ஒவ்வொரு இளைஞனும் தொழிலில் இருந்து கொண்டே கல்லூரிப் படிப்பைத் தங்கள் ஊதியத்தின் மூலம் படித்துக் கொள்ளலாம். காலை 7½ மணியிலிருந்து 10½ மணி வரையில் மூன்று கல்லூரிகள் வேலை செய்து வருகின்றன. தொழிலில் இருந்துகொண்டே கல்லூரியில் பயில விரும்பும் ஒவ்வொரு இளைஞனும் இம்மூன்றில்

ஏதாவதொரு கல்லூரியில் சேர்ந்து கல்வி பயின்று வரலாம். இந்த முறைப்படி தற்பொழுது பம்பாயில் எவ்வளவோ இளைஞர்கள், தங்கள் பெற்றோர்களைத் தொல்லைக்கு உட்படுத்தாமல் கல்வி பயின்று வருகின்றனர். நமது சென்னையும் பம்பாயைப் பின்பற்றினால் இளைஞர்களுக்கு எவ்வளவு நலமாக இருக்கும்!

ராசிபுரம்
17—11—50 — எஸ். முத்துசாமி.

○●○

## ஆதரிக்கிறேன்

நவம்பர் 12-ம் தேதி "கல்கி" இதழில் ஸ்ரீ வே. ராமநாதன் "சென்றிடுவீர் எட்டுத் திக்கும்..." என்ற தலைப்பில் எழுதிய வட்ட மேஜைக் குறிப்பைப் பார்வையிட்டேன். அதை பம்பாயில் வசிக்கும் தமிழனாகிய நானும் ஆதரிக்கிறேன்.

கடந்த மூன்று ஆண்டுகளாகப் பம்பாயில் வாழ்ந்து வரும் நான், என் தாய் நாட்டைக் கண்டு களிப்பதற்காகச் சமீபத்தில், ஒரு மாத லீவில் தமிழ் நாடு வந்திருந்தேன்.

தமிழ் நாட்டில் எங்கும் தண்ணீர்ப் பஞ்சம், பட்டினி, வேலை இல்லாத் திண்டாட்டம் இவற்றைக் கண்டேன். இந்த நிலையில் எங்கு பார்த்தாலும் பிச்சைக்காரர்கள்!

நம்முடைய நாட்டில் பிழைப்பதற்குத் தகுந்த வழி இல்லாதபடியால் என்னைப் போல் எத்தனையோ தமிழர்கள் பம்பாயில் முக்கிய பாகங்களில் வசிக்கின்றனர். அவர்கள் ஒவ்வொருவரும் இங்கு நல்ல நிலைமையிலும் இருக்கிறார்கள்.

தமிழர்களாகிய எங்களை இங்குள்ளவர்கள் மிகவும் மரியாதையாக நடத்துகிறார்கள். பல ஆபீஸ்களில் மதராஸி என்றால் மிகவும் மவுசு. ஏனென்றால் தமிழர்கள் வேலையில் அதிக ஊக்கம் செலுத்தி நல்ல வருமானம் பெறுகிறார்கள். இந்த நிலையில் திராவிடக் கழகத்தார் சென்னையில் மறியல் செய்வது போல பம்பாய், கல்கத்தா, டில்லி, பூனா முதலிய முக்கிய நகரங்களிலுள்ளவர்கள் "மதராஸி இங்கு கூடாது" என்று சொல்லி மறியல் செய்வதாய் இருந்தால் எங்கள் நிலை என்ன ஆகும்!

பம்பாய்
27—11—50 — ஆர். ஏ. நாதன்

○●○

## புதுமைப் பெயர்கள்

தற்சமயம் "கல்கி"யில் தொடர்ந்து வெளி வரும் தொடர்கதையைப் பற்றிச் சில வார்த்தைகள் எழுத விரும்புகிறேன்.

தொடர்கதையின் ஆரம்பத்தில் தாங்கள் நேயர்களை 'சில நூற்றாண்டுகளுக்கு முன் போவோம்" என்று அழைத்திருக்கிறீர்கள். அந்த நூற்றாண்டில் வாழ்வதாகக் கற்பனை செய்து கொள்ளச் சொல்லுகிறீர்கள். கற்பனை பண்ணிக் கொள்வோமே! தங்கள் தொடர்கதையைப் படிக்கும் பொழுது 10-ம் நூற்றாண்டுக்கே சென்று விடுகிறோம் என்பது மிகையாகாது. கதாபாத்திரங்களுடனே ஒன்றி விடுகிறோம். தொடர் கதையைப் படித்து முடித்ததும்தான் நம் சுய நினைவு வருகிறது. நாம் 20-ம் நூற்றாண்டிலுள்ள 'நாகரிக' மனிதன் என்று தெரிகிறது.

"பொன்னியின் செல்வ"னிலிருந்து, நம் நாட்டுப் புராதன மக்கள், அரசர்கள் எவ்வளவு தைரியசாலிகளாகவும், புத்திசாலிகளாகவும் வாழ்ந்துள்ளார்கள் என்பதை அறிந்து கொள்ளும் போது மனதுக்கு ஓர் உவகை உண்டாகிறது. தாங்கள் 19—11—50 'கல்கி' இதழில் 'உபய குசலோபரி' என்னும் பகுதியில் எழுதியுள்ளபடி கதா பாத்திரங்களாகிய "பழுவேட்டரையர், வணங்காமுடி முனையரையர், வல்லவரையன் வந்தியத்தேவன்" முதலிய பெயர்கள் உச்சரிக்கக் கஷ்டமாக இல்லை. நாம் தமிழ் மக்கள்தானே! நம் மூதாதையர்கள் பெயர்களை உச்சரிப்பதிலா நமக்குக் கஷ்டம்!

தவிர, தற்காலத்தில் ஒரே மாதிரியான பெயர்களையே கேட்டுக் கேட்டு அலுத்துப் போன நமக்கு அப் பெயர்கள் ஓர் புதுமையாகவும் இருக்கின்றன. அந்தப் பெயர்களிலேயே ஒரு காம்பீர்யம் நன்கு பிரதிபலிக்கிறது.

சென்னை
17—11—50 — ரா. ராமநாதன்.




"என்ன வாத்தியார் ஐயா! நம்ம மகன் சரித்திரப் பரீட்சைக் கேள்விகளைச் சரியாக எழுதவில்லை என்று அவனை நிறுத்திவிட்டீர்களாமே? அவன் பிறப்பதற்கு முன்னாலே நடந்த விஷயங்களெல்லாம் கேள்வி கேட்டால் அவனுக்கு எப்படித் தெரியும்?"

★★★ இனி வட்ட மேஜைக் கடிதங்களுக்குப் பரிசு வழங்கப்பட மாட்டாது. கடிதங்கள் மட்டும் அவ்வப்போது பிரசுரிக்கப்படும். ★★★

# ஆசிரியரும் ஆபீஸரும்

ர. வே.

ராமச்சந்திரன் பி. ஏ., எல். டி. பையும் கையுமாகப் போய்க் கொண்டிருந்தான். 'ராமச்சந்திரா! நில்லு, கொஞ்சம்! நானும் வந்து விட்டேன்'' என்ற குரல் பின்னாலிருந்து வந்தது. யார் கூப்பிடுவது என்று அவன் திரும்பிப் பார்த்தான். தன் பருத்த உடலைச் சற்று சிரமப்பட்டுத் தூக்கிக் கொண்டு, சிறிது வேகமாய் வந்து கொண்டிருந்தான் கிருஷ்ணமூர்த்தி. அவனுடைய வழுக்கைத் தலையைச் சூரியன் 'ஆர்க் லைட்' போட்டாற் போல் ஜொலித்துக் கொண்டிருந்தான்.

கிருஷ்ணமூர்த்தி ராமச்சந்திரனுடைய பள்ளிக்கூட காலச் சிநேகிதன். இருவரும் கீழ் வகுப்பிலிருந்து தொடங்கி, பி. ஏ., தேறும் வரை சேர்ந்தே வாசித்து வந்தவர்கள். ராமச்சந்திரன் பி. ஏ. பட்டம் பெற்றதும், ஆசிரியர்க் கல்லூரியில் சேர்ந்து எல். டி. வாசித்துத் தேர்ந்து, அதிலும் ஒரு பட்டத்தைப் பெற்றுக் கொண்டு வந்தான். கிருஷ்ணமூர்த்திக்கு அந்தக் காலத்தில் சர்க்கார் உத்தியோகத்தில் ஓர் உறவினர் இருந்தார். அவர் சிபாரிசு செய்து, அவனை ஒரு நல்ல இலாகாவில் சேர்த்துவிட்டார். இப்போது அவன் ஒரு ஆபீசராக ஆகியிருந்தான். தலையில் வழுக்கை கூட விழுந்து விட்டது.

"எங்கேடா கிளம்பினாய், ராமச்சந்திரா?"

"பார்த்தால், தெரியவில்லையாடா? இந்தக் காலை வேளையில் பையும் கையுமாய்ப் போக, மார்க்கெட்டைத் தவிர வேறு என்ன இடம் இருக்கிறது?"

"அடே, ஆச்சரியமாய் இருக்கிறதே! நீ கூட மார்க்கெட்டில் காய்கறி வாங்கிச் சாப்பிடுகிறாயாடா?" என்றான் கிருஷ்ணமூர்த்தி கேலியாக.

"மாசம் பிறந்த புதிதில், கொஞ்ச நாளைக்கு என்னென்னவெல்லாமோ கிடைக்கும். உனக்குத் தெரியாது போல் இருக்கிறது"

"அதுதானே பார்த்தேன்? ஓஹோ, சம்பளம் வந்த புதிசோ இது? மறந்தே போய்விட்டேன். இல்லா விட்டால் நீ ஏன் மார்க்கெட்டுப் பக்கம் தலை காட்டப் போகிறாய்?"

"அது கிடக்கட்டும்! நீ பெரிய ஆபீசராச்சே; சாதாரணமாய், நீ இப்படி கறிகாய் வாங்க வரமாட்டாயே; எவனாவது பியூன் உனக்கிருப்பானே; ஏது அபூர்வமாய் நீயே இன்றைக்குக் கிளம்பி விட்டாய்?"

"எல்லாம் நீ கறிகாய் வாங்கப் போகும் அதிசயத்தைப் பார்க்கத்தான்!"

"நானாவது மாசம்பிறந்த முதல் பத்து நாளைக்கு மார்க்கெட்டுக்கு வருவேன். நீ அதுகூட வந்ததில்லையே?"

"நான் வந்து வாங்கினால் என்ன, என் பியூன் எவனாவது வந்து வாங்கினால் என்ன? ஆமா, உன்னைப்போல் இல்லாமல் நான் கறிகாய் வாங்கிச் சாப்பிடுகிறேனே, அதைச் சொல்லு."

"ஏன், இன்றைக்கு அந்தப் பியூன் ஆபீசரையே அனுப்பி விட்டான்? ஒரு நாளாவது ஆபீசர் பியூனாக இருக்கட்டுமே என்று?"

"ஒரு நாள் நாமேதான் போய் வாங்கிக் கொண்டு வருவோமே என்று தோன்றியது. உடனே பையை எடுத்துக்கொண்டு கிளம்பி விட்டேன்."

"நல்ல ஆபீசர்ப் பிழைப்பு அப்பா!"

எப்போதுமே கிருஷ்ணமூர்த்திக்கு ராமச்சந்திரனைக் கண்டால், ஒரு பரிதாபமும் பரிவும் பரிகாசமும் உண்டு. இப்போது கேட்க வேண்டுமா?

"நான் மனசில் இருப்பதைச் சொல்கிறேன், ராமச்சந்திரா, 'என்னடா இவன் இப்படிச் சொல்கிறானே' என்று நினைக்காதே. பி. ஏ. பாஸ் பண்ணி விட்டு, போயும் போயும் நீ இந்த வாத்தியார் உத்தியோகத்துக்கு வந்தாயே, உன் மூளையை என்னவென்று சொல்வது! வெறும் பி. ஏ. கூட இல்லை; எல். டி. வேறு படித்து விட்டு, இந்த வேலைக்கு வந்தாயே?"

ராமச்சந்திரன் கேட்டுக் கொண்டே வந்தான்.

"இருபது வருஷமாய் வேலை பார்க்கிறாயே, ஒரு பிரமோஷன் உண்டா? ஒரு நன்மை உண்டா? அடுத்தாற்போல் உன்னிடம் நேற்றைக்குப் படித்து விட்டுப் போன பசங்களெல்லாம், இன்றைக்கு ஒவ்வொரு இடத்திலே பெரிய பெரிய ஆபீசர்களாக இருக்கிறார்கள். நீ இந்த இருபது வருஷத்தில் எவ்வளவு பேரைக் கரையேற்றி யிருப்பாய்? முடிவில் நீ கண்ட பலன் ஏதாவது உண்டா?"

"அத்தனை பேரைக் கரையேற்றினது ஒரு பலன் இல்லையா? அதை நினைத்தால், நமக்குச் சந்தோஷமாய் இல்லையாடா!"


அடாடா! என்னிடமிருந்த காசு எங்கேயோ கீழே விழுந்து விட்டதே? மிருகக்காட்சிச் சாலைக்குள் போக முடியாதே என்ன செய்யலாம்?
மிருகக்காட்சிசாலை. டிக்கட் — 2 அணா


இந்தா! இந்த வாழைப் பழங்களைச் சாப்பிடு.


பேஷ்! உன்னுடைய யுக்தி பிரமாதம்

# பிரமாத யுக்தி


இதோ பார்! ஒரு யானை வருகிறது. அதில் ஏறிக் கொள்ளலாமா?


பலே யானை சவாரி!


இந்தக் கூண்டிலுள்ள சிங்கத்தைப் பார்த்தாயா?


நீங்கள் இருவரும் டிக்கட் கட்டணத்தை இங்கே செலுத்தி விட்டுப் பின் வெளியே செல்லுங்கள்
டிக்கட் — 2 அணா


அதிர்ஷ்டவசமாக அந்தப்பக்கம் வந்த அவர்களுடைய மாமா டிக்கட் கட்டணத்தைச் செலுத்திவிட்டுப் பிறகு அவர்களை வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போனார்.

## நீங்கள் உங்கள் பற்களை

## இன்று மக்ளீன் செய்தீர்களா?

"உங்கள் பெராக்ஸைட் பற்பசையை ஒரு மாதத்திற்கு முன் நான் உபயோகிக்கத் தொடங்கினேன். அது ரொம்ப நன்றாயிருப்பதை அறிந்தேன். என் பற்கள் விகாரமாகக் கறை படிந்திருந்தன; ஆனால் உங்கள் பற் பசையை உபயோகிப்பது முதல் அவை வெள்ளை வெளேரென்றாகி விட்டன."



மூச்சின் நாற்றத்தை போக்குகிறது.

வாயைச் சுத்திகரித்து ஈறுகளைப் பாதுகாக்கிறது.

மேலே உள்ள கறைகளை அகற்றி பற்களுக்கு **வெண்மை** தருகிறது.

உங்களுக்கு சிறந்ததோர் பற் பசை வேண்டுமானால், மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற் பசையை உபயோகியுங்கள். மக்ளீன்ஸ் ஒன்றில்தான் பற்களை வெண்மையாக்கக் கூடிய பெராக்ஸைட் இருக்கிறது. இதன் பிரத்யேகமான தயாரிப்பு முறையினால் பல் கெடுவதைத் தடுக்க உதவுகிறது. வாயில் ஊறும் நீரை மிதப்படுத்தி, கறைகளைப் போக்கி, பற்களைப் பள பளப்பாகவும் வெளுப்பாகவும் ஆக்கி, சுவாசத்திற்கு பெப்பர்மெண்டின் நறு மணத்தைத் தருகிறது.

**இன்றே மக்ளீன்ஸ் வாங்குங்கள்!**



# பிறகு என்ன?

என். பட்டம்மாள்

முடிவில்லாத காவியம் அதிக சுவாரஸ்யமாகயிருக்கிறது. பூரணமடையாத கானம் இதயத்தில் ஒலித்துக்கொண்டே இருக்கிறது. முற்றுப் பெறாத கற்பனை இன்பமான உலகத்திற்கு இடம் கொடுக்கிறது. ஆனால் இந்த மனித வாழ்க்கை மட்டும் நிச்சயமாக என்ன ஆகிவிட்டது என்று தெரியாவிட்டால் மனது சாந்தியடைவதில்லை. அதனால் தான் இதைப் படித்து விட்டாவது, யாராவது அவளிடம் சொல்ல மாட்டார்களா என்னும் அற்ப ஆசை என்னை விட்டகலவில்லை.

அன்று சனிக்கிழமை. நானும் அம்மாவும் தபால்காரன் வருகிறானா என்று பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தோம். கடைசியில் தபால்காரன் வழக்கம்போல் எங்கள் வீட்டுப் பக்கமே வராமல் போய் விட்டான்.

"சரி, சாப்பிடப் போகலாம் வா!" என்றாள் அம்மா.

நானும் எழுந்தேன். அந்தச் சமயத்தில் தான் அவள் 'கேட்'டில் நுழைந்தாள்.

அம்மா உடனே, "தெரீனு போயிருக்கிறது. அட பாவமே! இப்படிப்பட்ட பெண்களோடு ஏன் தான் சிநேகம் வைத்துக்கொண்டிருக்கிறாயோ? இன்று சாப்பாடு கூப்பாடு தான் போ" என்று கோபத்துடன் சொன்னாள். நானும் முதலில் தெரீனு தான் வருகிறாள் என்று எண்ணினேன். கிட்டே வரவரத்தான் அது யாரோ ஒரு கூனிக் குறுகின ஸ்திரீ என்று தெளிவாகியது. முகப்பறியப் பெண்ணைப் போல், வெயிலுக்காகத் தலையில் துணியைப் போட்டுக்கொண்டிருந்தாள்.

"சரிதான், இந்தப் பிச்சைக்காரத் தொல்லை தீராது போலிருக்கிறதே! வாசலில் அரை நாழிகை உட்கார விட்டுவிட மாட்டார்கள் போலிருக்கிறதே!" என்று முணுமுணுத்துக் கொண்டே அம்மா உள்ளே போய் விட்டாள். நான் மட்டும் தைரியமாக வாசற்படியிலேயே உட்கார்ந்துகொண்டு என்ன மாதிரி காரணம் சொல்லிப் பிச்சை கேட்கப் போகிறாள் என்று பார்த்துக் கொண்டிருந்தேன். அவள் தயங்கித் தயங்கி அருகில் வந்தாள். பிறகு பயபக்தியுடன் சற்றுத் தூரத்தில் நின்றவாறே, "உங்களுக்குப் பாவாடை லேஸ், பாடி லேஸ், குஷன் கவர், குழந்தை குல்லா ஏதாவது தேவையா?" என்று சீவனற்ற குரலில் கேட்டாள்.

நான் வேண்டாம் என்று சொல்லி அனுப்பத்தான் வாயெடுத்தேன். நான் நிமிர்ந்து அதைச் சொல்ல ஆரம்பித்த அந்தக் கணம் எங்களிருவர் கண்களும் சந்தித்துக் கொண்டன. வாழ்க்கையின் முதல் படியில்கூடக் காலை வைக்காத என் கண்களும் வாழ்க்கையின் கடைசிப் படியில் தாமதித்து நின்ற அவள் கண்களும் பேசிக் கொள்வதற்கு என்ன விஷயம் இருக்கப் போகிறது? இருந்தாலும் அவைகள் தான் அவளைப் பற்றி எவ்வளவோ விஷயங்கள் கூறின. அந்தக் கண்கள் குழி விழுந்து, தினம் தினம் ஓயாமல், அனவரதமும் அழுது அழுது களைத்துப்போயிருந்தன. இயற்கையிலேயே சிவப்பாகயிருந்திருக்க வேண்டும் அவள். அதனால்தான் அந்த அமானுஷ்ய வெளுப்பு முகத்தில்.

"உம்............வேண்டும் உட்கார்ந்து கொள்ளுங்கள்" என்றேன் நான். வெகு நேரம் நடந்ததால் அவள் கால்கள் துவண்டன. அழகு அழகான லேஸ்களை எடுத்து வாசற் படியில் வைத்தாள் அவள். வித விதமான ரோஜாப் பூக்களும் கொடிகளும் கண்ணைக் கவர்ந்தன.

"நீங்கள் போட்டதா இதெல்லாம்?" என்று கேட்டு வைத்தேன்.

"இல்லை, என் பெண் போட்டது" என்று மெல்லிய குரலில் சொன்னாள். உடனே அம்மாவுக்கு அவள் மேல் கரிசனம் ஏற்பட்டு விட்டது.

"பெண் என்ன, சின்னப் பெண்ணா, பெரியவளா?"

"பெரியவள்தான்!"

"கல்யாணமாகி விட்டதா?" அம்மாவுக்கு அவள் பெண்ணுக்கும் கல்யாணமாகாமலிருந்தால், இந்தக் கல்யாணம் பண்ணும் கஷ்டத்தை ஒரு அனுதாபியிடம் சொல்லலாமே என்று ஆவல்.

"அந்தப் பெண்ணின் கல்யாணத்தால் தானே இந்த ஊர் பேர் தெரியாத டவுனில் இப்படித் தடுமாறுகிறேன்!" என்று அவள் சர்வ சாதாரணமாகச் சொன்னாள்.

"ஏன்? பெண்ணைக் கஷ்டப்படுத்துகிறானா மாப்பிள்ளை?" என்று கவலையோடு கேட்டாள் அம்மா.

"லக்ஷ்மி, கொஞ்சம் மோர் கொண்டு வா. இந்தப் பாழும் இடத்திற்கு பஸ்ஸா மண்ணா ஒன்றும் கிடையாது" என்று புதிதான கனவுடன் சொல்லி உட்கார்ந்து கொண்டாள். அவள் சொல்ல ஆரம்பித்தாள். அது புதிதான கதையல்ல. எவ்வளவோ துரதிர்ஷ்டசாலிப் பெண்களுக்கு வேறு வேறு காரணங்களால் ஏற்பட்

டிருக்கும் மிக மிகச் சகஜமான சம்பவம் தான். ஆனால் அவளுடைய பெருந்தன்மையான குணமும் சோக உருவமும் இன்னும் என் கண்முன் நிற்கிறது. அவைதான் அந்தப் பழங் கதைக்கு அவ்வளவு தனித் துயரம் ஒன்றை அளித்தன. அவள் சொன்னதின் சாராம்சம் இதுதான்.

அவள் மராட்டி வகுப்பைச் சேர்ந்தவள். இரண்டு பெண்கள் இருந்தன. அவளுக்குக் கணவன் சிறுவயதிலேயே இறந்து விட்டான். மங்களூரில் ஏதோ கொஞ்சம் சொத்தை வைத்துக் கொண்டு கௌரவமாகக் காலங் கழித்து வந்தாள். பெண்ணுக்கு வயதாகியது. தன் தூரத்து உறவினன் ஒருவனுக்குப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுத்தாள். ஆனால் திடீரென்று மாப்பிள்ளை, பெண்ணை அழைத்துக் கொண்டு கூடப் போகாமல், பெண்ணுக்குப் பைத்தியம் என்று வக்கீல் மூலமாக நோட்டீஸ் கொடுத்து விட்டான். அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை. மாப்பிள்ளையிடம் சென்று ஏன் அப்படி எல்லாம் செய்கிறான் என்று கேட்டு, கெஞ்சியாவது தன் பெண்ணை அழைத்துப் போகுமாறு சொல்வதற்காக அவனிருப்பிடம் சென்றாள். அவன் அவளைப் பார்க்கக்கூட மறுத்து விட்டான். அவளுடைய கண்ணீர் நிறைந்த கடிதங்களும் நிராகரிக்கப் பட்டன. கடைசியில் வேறு வழியில்லாமல் பதிலுக்குத்தானும் நோட்டீஸ் கொடுத்தாள். அதோடு மட்டுமல்ல. தன் பெண் எப்படியாவது கணவனோடு சேர்ந்து வாழ வேண்டுமென்பதற்காக பங்களூரிலிருந்து, தன் சொத்து எல்லாவற்றையும் விற்றுவிட்டுத் தன் மாப்பிள்ளையின் ஊரான இந்த ஊருக்கு வந்து சேர்ந்தாள். ஒரு வக்கீலையும் அமர்த்தினாள். கேஸ் நடந்தது. மாப்பிள்ளையின் இஷ்டப் பிரகாரமே எவ்வளவோ பெரிய டாக்டரிடம் எல்லாம் பெண்ணைக் காண்பித்தாள். பெண்ணுக்குப் பைத்தியமுமில்லை, ஒரு விதமான வியாதியுமில்லை என்று அவர்கள் ஊர்ஜிதம் செய்தார்கள். இதற்குள் பணமெல்லாம் கரைந்துவிட்டது. தினசரி சாப்பாட்டுக்கே திண்டாட்டமாகி விட்டது. கடைசியில் இம்மாதிரி லேஸ் தைத்துப் பிழைக்கிறார்கள். சில நல்ல மனிதர்கள் இரண்டாவது பெண்ணுக்குப் புஸ்தகம் வாங்கித் தந்து விட்டார்கள். அவள் ஏதோ சின்ன வகுப்பில் படித்து வருகிறாள். யாரை நம்பிப் பெரிய பெண்ணை வீட்டில் விட்டு விட்டு வருவாள் இந்தக் கிழவி? அவளைச் சேவாசதனத்தில் விட்டுவிட்டு தினம் இவ்வாறு நாலைந்து மைல்கள் கால் நடையாகவே நடந்து லேஸ்களை விற்கிறாள்.

இதைக் கேட்டதும் அம்மா, "ஏன், மாப்பிள்ளையிடமே 'பெண்ணைப் பிடிக்கவில்லையா' என்று கேட்டு விடுவது தானே!" என்றாள்.

"பெண் பிடித்திருக்கிறது என்று முதலில் அவன் பார்த்துச் சொன்ன பிறகு தானே கல்யாணம் செய்தோம்? மேலும் டாக்டர்கள் பைத்தியமில்லை என்றவுடன் மனம் நெகிழ்ந்து அழுதானே!"

"பின் அவனுக்கு யார் சமைத்துப் போடுகிறார்கள்? ஹோட்டலிலா இருக்கிறான்?"

"இல்லை. அவன் அத்தை பெண் ஒருத்தி சமைத்துப் போடுகிறாள்!"

"இப்பொழுதுதான் புரிகிறது. அவளுக்கும் அவனுக்கும் ஏதாவது விசேஷ உறவு இருந்து தொலைத்திருக்கும்!"

"ஐயோ! அப்படிச் சொல்லாதீர்கள். தெரியாத விஷயத்தைப் பற்றி நாம்



ஒன்றும் சொல்லக் கூடாது. அவள் அந்தப் பெண் அப்படி பட்டவளல்ல."

அம்மா மீண்டும் கேட்டாள் :

"அந்த மாப்பிள்ளை அவசியம் மூர்க்கனாகத்தான் இருக்க வேண்டும். கெட்ட சகவாசம் இல்லாமலிருந்தால் ஏன் இப்படிப் பெண்ணை ஒருதரம் கூட அழைக்காமல் இருக்கிறான் ?"

அவன் நடுவில் குறுக்கிட்டுச் சொன்னான் :

"இல்லை. அவன் என் உறவினன்தானே! ஒரு கெட்ட பழக்கமும் கிடையாது. அவன் ரொம்ப நல்ல பிள்ளை. மிக மிக பயந்த குணமுடையவன்."

"வழக்கின் தீர்ப்பு என்ன?" என்று துடி துடிப்புடன் கேட்டேன் நான்.

"இன்னும் தெரியவில்லை. அனேகமாக கேஸை 'டிஸ்மிஸ்' செய்து விடுவார்கள்."

"ஏன், கொஞ்சம் படித்து விட்டு, பிரைவேட்டாக எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை எழுதிவிட்டு, போனால், தையல் வாத்தியாராகப் போகச் சொல்லிவிடுங்கள். அந்த மனிதப் பதரிடம் மறுபடி என்ன வாழ்வு வேண்டிக்கிடந்தது?" என்று ஆத்திரத்துடன் கேட்டேன் நான்.

"அப்படி யிருந்து விடலாம் அம்மா. பிரமாதமில்லை! வயிற்றுப் பிழைப்பு நடந்து விடும். அரட்டுக் கௌரவம் கிடைத்துவிடும். ஆனால்......ஆனால் இது பொல்லாத வம்புக்கார உலகம். ஆண்கள் பெண்டாட்டியைத் தள்ளி வைத்தால் அவர்களை ஒன்றும் சொல்லாது. ஆனால் அந்தப் பெண்டாட்டிக்கு மட்டும் பட்டம் கிறையக் கட்டி விடும். மேலும் நான் என்றைக்குமா இப்படிக் கட்டிக் காத்துக் கொண்டு இருப்பேன்? நான் நாலு நாளைக்கு வேலை போனாலும் வயிற்றைக் கட்டிக்கொண்டு சாப்பிடாமல் இருந்து விடுவேன்? ஆனால் ஒரு அவச் சொல்......

"இந்த வீட்டில் சமையலுக்கு ஓர் ஆள் வேண்டும் என்று கேள்விப்பட்டேன்!"



"ஆமாம், நாங்கள் ஒரு ஆளைத் தீர்மானம் பண்ணி வேலைக்கு வைத்துக் கொண்டு விட்டோமே!"

"ஓகோ! அப்படி யானால் இந்த மாசம் போகட்டும். நான் அடுத்த மாசம் வந்து உங்களைப் பார்க்கிறேன்!"

ஒரே ஒரு களங்கம். அவ்வளவுதான். என் பிராணன் போய்விடும். அதனால்தான் இப்படிச் சொத்தைக் கரியாக்கி, நான் பிச்சையெடுத்தால் கூடப் பெண்ணை அவள் கணவனிடம் அனுப்பிவிடப் பார்க்கிறேன்" என்றான் அவன்.

அவன் குரலில் வருத்தம் இல்லை; ஆத்திரம் இல்லை; ஏக்கமும் இல்லை. ஒவ்வொரு வார்த்தையும் ஏதோ மனப் பாடம் செய்ததுபோல் நிதானமாக வந்தது. சாந்தமும் சோகமும் ஒரு தெய்வீக ஒளியைக் கொடுத்தது அந்த முகத்திற்கு.

"பார்த்தீர்களா? உங்கள் மாதிரி யிருக்கும் பெண்களால்தான் இந்த உலகம் இப்படி ஆண்கள் உலகமாகி விட்டது. ஜனங்களுக்கெல்லாம் இப்பொழுது கண் திறந்து விட்டது' அப்படிச் சில மூட்டாள் மனிதர்கள் என்ன சொல்லிக் கொண்டால் தான் என்ன? நமக்காகத்தானே வாழ்கிறோம்? ஊருக்காகவா? நமது உள்ளம் பரிசுத்தமா யிருக்கும்போது பிறர் என்ன நினைத்தால் என்ன? அந்த மாப்பிள்ளையை நானாக யிருந்தால் ஏறெடுத்துக் கூடப் பார்க்க மாட்டேன். உலகம்! சமூகம்! இவைகளா சாதம் போடுகிறது, கிம்பளம் கொடுக்கிறது நமக்கு? நீங்கள் தயவு செய்து பெண்ணைக் கரகரவென்று இழுத்துப்போய்க் கிணற்றில், இல்லை, ஆற்றில் தள்ளித் தொலையுங்கள். ஆனால் அந்தப் படுபாவியிடம் மாத்திரம் கொண்டுபோய்ச் சேர்க்காதீர்கள். வேண்டாத புருஷனோடு வாழாமல் இருக்க பணிக்கும் அதிகாரம் இருக்கிறது."

"சரிதான்! பேசுவதெல்லாம் சுலபம் தான். உலகத்தை எதிர்க்கத் தைரியம் வேண்டாமா? ஏதோ புஸ்தகத்தைப் படித்துவிட்டுச் சொல்லிவிட்டால் ஆகிவிட்டதா?' என்றாள் அம்மா. அதைக் கவனிக்காதவன் போல் அவன் மறுபடி அமைதி நிறைந்த அந்தக் குரலில் சொன்னான் :

"ஆமாம்! நீங்கள் சொல்லுவதும் உண்மைதான். வேண்டாத வீட்டில் அவளைக் கொண்டுபோய் விட்டால், என்ன கேடு வருமோ? என்ன இருந்தாலும் அவள் வயிற்றுக்குச் சம்பாதிக்கத் தைரியம் அவளுக்கில்லையா? மேலும் மனம் காவலா, மதில் காவலா? நான் யார் அவளைக் கட்டிக் காக்க? எவ்வளவோ பெண்கள் தன்னைத் தனியாக இருக்கவில்லையா? நம் கஷ்டத்தையும், இஷ்டத்தையும் தெரிந்து கொள்ளாத உலகத்திற்கு நாம் ஏன் பயப்பட வேண்டும்? யார் என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளட்டும். அவளைக் கணவன் வீட்டில் விடக் கூடாது. கட்டாயம் கூடாது." அவனுடைய உறுதி

பிரமிக்கத் தக்கதாக இருந்தது. சற்று நேரம் வெட்ட வெளியையே பார்த்தவாறு, மௌனமாக இருந்தான். பிறகு, "சரி, போகட்டுமா நான்?" என்று எழுந்து நின்றான். நான் லேஸுக்குப் பணத்தைக் கொண்டு வந்து கொடுத்தேன். அம்மா, எதையோ நினைத்துக் கொண்டவள் போல், அவனைப் பார்த்து, "உன் பேர் என்ன?" என்று கேட்டாள்.

"சீதையம்மா!" என்று சொல்லிவிட்டு, "எது நடந்தாலும் அது அவள் தலை விதி. விதியையா நான் மாற்றி எழுத முடியும்?" என்று சொல்லிக் கொண்டே அவன் போய் விட்டான்.

ஆடி, ஆடி, தள்ளாடிச் சென்ற அவன் வெகு நேரம் எங்கள் சாலையிலேயே நடந்து போய்க்கொண்டே இருந்தான். கடைசியில் அவனுடைய சின்னஞ் சிறிய உருவமும் தூரத்தில் மறைந்தே போய் விட்டது. அவன் போன திசையையே நான் பார்த்துக்கொண்டிருந்தேன்.

திடீரென்று அம்மா, "சீதை யென்று பெயர் வைத்துக் கொண்டிருக்கிறான் அல்லவா? அதுதான் இப்படி" என்றாள்.

நான் திரும்பி வந்து வாசற்படியில் உட்கார்ந்துகொண்டேன்.

"நான் எதனால் தெரியுமா, அந்த 'லேஸ்'களை வாங்கச் சொன்னேன்? அவள் பெண், நானும் பெண். பெண்களைத்தான் உலகம் இன்னும் புரியாத புதிராக வைத்திருக்கிறதே!" என்றேன் நான்.

"என்னவோ, நாம் கஷ்டம் கஷ்டம் என்கிறோம். பார்த்தாயா இதை?" என்றாள் அம்மா.

"இது பிரமாத கஷ்டமில்லை. நாமாக நினைத்துக் கொள்வதுதான். ஒவ்வொரு மனிதனும் தன் மனச்சாட்சிக்கு விரோதமாக நடந்து கொள்ளக் கூடாது. பிறரைப் பற்றிப் பயப்படவும் கூடாது. அப்படியிருந்தால் இந்தத் தொல்லைகளெல்லாம் ஒழிந்து போய்விடும்" என்றேன் நான்.

இது நடந்து எட்டு வருஷமாகிவிட்டது. அவன் திரும்பி வரவேயில்லை. எங்கெங்கேயெல்லாமோ விசாரித்தேன். யாரை யாரையெல்லாமோ கேட்டேன். முன்பின் தெரியாதவர்களிடமெல்லாம் அவன் அடையாளத்தைச் சொல்லி வைத்தேன். இருந்தும், இன்னும் என் கண்ணில் படவில்லை அவன். சாதாரணமாக அவன் யாரையாவது, ஒன்றுமில்லா விட்டால், கடவுளையாவது தன் கஷ்டத்திற்குக் குற்றம் சொல்லியிருந்தால், நான் இவ்வாறு அவனிடம் சிரத்தை எடுத்துக் கொண்டிருக்க மாட்டேன்; குற்றமற்ற தன் பெண்ணையும், ஒரு பாவமும் அறியாத தன்னையும் இந்நிலைக்குக் கொண்டு வந்ததற்கு, மனித இயல்புக்கே புறம்பாக அவன் யாரையும் பழி சொல்லவில்லை. அதனால்தான் அவன் தனிப் பிறவியாக எனக்குத் தோன்றினான். என் நெஞ்சில் தினம், என்ன தீர்ப்பு ஆயிற்று? என்ன செய்தான் அவன் பெண்ணை? கொண்டு போய் அந்த மாப்பிள்ளையிடம் விட்டு விட்டானா? அவன் சந்தோஷமாக வைத்துக் கொண்டானா, இல்லையா? அவள் உயிருடன்தான் இருக்கிறாளா? என்ற கேள்விகள் உறுத்திக் கொண்டேயிருக்கின்றன. நல்ல கட்டத்தில் புஸ்தகம் கிழிந்து விட்டிருந்தால், சினிமா அறுந்து போய்விட்டால் எப்படியிருக்கும்? எல்லாச் சமயத்திலும் என் உள்ளத்தின் அடியில், 'அதற்குப் பிறகு என்ன?' என்ற சொல்ல முடியாத, தீர்க்க முடியாத, கேள்வி ஊசலாடிக் கொண்டே இருக்கிறது. 'விதியையா நான் மாற்றி அமைக்க முடியும்?' என்ற அவனுடைய உணர்ச்சியற்ற வறண்ட குரல் இன்னும் என் காதிலேயே இடைவிடாமல் கேட்டுக் கொண்டிருக்கிறது.



சென்ஸஸ் எடுப்பவர்:— என் அம்மா! உங்கள் கணவரின் வயது என்ன?

வீட்டுக்கார அம்மாள்:—நாற்பது.

செ. எடுப்பவர்:—உங்கள் கணவரின் மாத வருவாய் என்ன?

வீ. அம்மாள்:—இருநூறு.

செ. எடுப்பவர்:—உங்கள் கணவர் புகையிலை போடுவாரா?

வீ. அம்மாள்:—போடுவார்; இன்னும் என்னவெல்லாம் கேட்க வேண்டுமோ அதையெல்லாம் சீக்கிரம் கேட்டுத் தொலையுங்கள்.

செ. எடுப்பவர்:—கேள்வி அவ்வளவுதான்: எனக்குக் கொஞ்சம் புகையிலை கொடுங்கள்.

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 313. வான மகளிரும் மாழ்கினர்.

வீராதி வீரனான மகன் அதிகாயனை இழந்த தானமாலை இதயம் உடைந்தவளாய்க் கணவன் ராவணனைத் திட்டினாள். எல்லாம் துயர வெறி காரணமாகத்தான்.

மனசில் அடக்கி வைத்திருந்த ஆங்காரமும் வெளியே வந்து விட்டது: "மதியிழந்து காமக்கோட்டிக்கு உள்ளானவர்களுக்கும் பிழைப்பு உண்டா? சீதையால் இன்னும் என்னென்ன விளைந்து தொலைக்கப் போகிறதோ?" என்று உள்ளத்திலிருந்த ஆங்காரத்தையும் வெளியிட்டு விட்டாள். எல்லாம் ராவணன் முன்னிலையில்தான்.

* * *

மேலும் குமுறுகிறது தானமாலையின் உள்ளம்:

விபீஷணன் உயர்ந்த அறிவுடையவன். அவனுடைய வார்த்தையைத் தள்ளிவிட்டாய். வயதும் அனுபவமும் முதிர்ந்த பாட்டன் மால்யவான், சீதையை ராமனிடம் விட்டு விட வேண்டும் என்று எவ்வளவோ சொன்னான். அதையும் கேட்கவில்லை நீ.

உம்பி உணர்வுடையான்
சொன்ன உரைகேளாய்;
தம்பி குலக்கிழவன்
கூறும் நலம்ஓராய்;
கும்ப கருணனையும்
கொல்வித்(து)என் கோமகனை
அம்புக்(கு) இரையாக்கி,
ஆண்டாய் அரசையா!

[உம்பி: விபீஷணன்; உணர்வுடையான்: சிறந்த அறிவாளி; தம்பி குலக்கிழவன் கூறும்: குடும்பத்துக்கு மூத்தவனான மால்யவான் சொன்ன; நலம் ஓராய்: நல்ல பிரயோசனமான வார்த்தையின் பயனை உணராவில்லை; என் கோமகனை: அதிகாயனை; ஆண்டாய் அரசு ஐயா: வெகு அழகாய்த்தான் அரசு செலுத்துகிறாய்! நீ ஆளுகிறது ஒரு அரசாட்சியோ!

குறிப்பு:—மனக் கசப்பு எப்படி எல்லாமோ உருவம் எடுக்கிறது தானமாலையின் வாயில்.]

* * *

இப்படியெல்லாம் அழுது அரற்றுகிறாள். ராவணனோ வாய் பேச முடியாமல் அப்படியே நிற்கிறான்.

தானமாலையின் வார்த்தைகளைக் கேட்கப் பரிதாபமாய் இருக்கிறது. அதைப் போலவே பரிதாபமாக இருக்கிறது ராவணன் மௌனமாய் நிற்கிற நிலையைப் பார்க்க.

பக்கத்தில் நின்ற உயர்ந்த குலத்தைச் சேர்ந்த பெண்மணிகள் பார்த்தார்கள். (சாம்ராஜ்யம் காரணமாகக் கப்பம் கட்டும் அரச குலத்துப் பெண்கள் சக்கிரவர்த்தினிகளுக்குக் குற்றேவல் செய்வது சாம்ராஜ்ய மரபு) தானமாலையைக் கைத்தாங்கலாகத் தாங்கி அரண்மனைக்குக் கொண்டு போகிறார்கள்.

என்று பலபலவும்
பன்னி எடுத்தழைத்துக்,
கன்று படப்பிழைத்த
தாய்போல்க் கவல்வாளை,
நின்ற உருப்பசியும்
மேனகையும் நேர்ந்தெடுத்துக்,
குன்று புரையும்
நெடுங்கோயில் கொண்டணைந்தார்.

[என்று பல பலவும்: மேலே சொன்னபடி பல பல விதமாக; பன்னி எடுத்தழைத்து: சொல்லிச் சொல்லிக் கதறியவளாய் இறந்த மகனை கூவி அழைத்து; கன்று பட: கன்று இறந்துபோக; பிழைத்த தாய்போல்க் கவல்வாளை: பிழைத்த பசுவைப் போலச் சோர்பவ

ளான தானமாலையை: நின்ற உருப்பசியும் மேனகையும்: பக்கத்தில் நின்ற அரிய நாகரிகம் வாய்ந்த.—ஊர்வசியோ, மேனகையோ என்று சொல்லக் கூடிய நாகரிகம் வாய்ந்த பெண்மணிகள்; தேர்ந்தெடுத்து: அருகில் வந்து கைகளால் தாங்கியவர்களாய்: குன்றுபுரையும்: மலையைப்போல் அவ்வளவு உயர்ந்த; நெடும் கோயில் கொண்டணைந்தார்: பெரிய அரண்மனைக்குக் கொண்டு போனார்கள்.]

இப்படிக் கைத் தாங்கலாய்த் தானமாலையைக் கொண்டு போகும் காட்சியைப் பார்த்தவர்கள் அப்படியே உருகி விட்டார்கள்.

பிரதானிகளான நகரத்து அரக்கர்கள் ஒருவரோடொருவர் இனந் தெரியாத முறையில் கட்டிக்கொண்டு புலம்பினார்கள் — ஏதோ தங்கள் தங்கள் மக்களே இறந்து போனார்கள் என்று செய்தி கேட்டுப் புலம்பின வர்கள் போலப் புலம்பினார்கள்.

தான நகரத்(து)
அரக்கர் தலைமயங்கிப்,
போன மகவுடையார்
போலப் புலம்பினர்;—
ஏனை மகளிர்நிலை
என்னாகும்!—போய்இரங்கி
வான மகளிருந்தும்
வாய்திறந்து மாழ்கினர்.

[தான நகரத்து அரக்கர்: உயர்ந்த ஸ்தானங்களிலுள்ள நகரத்து அரக்கர்கள்; தலை மயங்கி: அறிவு மயங்கி ஒருவரோடொருவர் கட்டிக்கொண்டவர்களாய்; போன மகவுடையார் போலப் புலம்பினர்: தங்கள் சொந்தப் புதல்வர்கள் இறக்க அந்தச் செய்தியைக் கேட்டவர்கள் போலப் புலம்பினார்கள்; அப்படியானால் ஏனை மகளிர் நிலை என் ஆகும்: அரசகுலப் பெண்களது நிலை எவ்வளவு பரிதாபமாய் இருக்கும்; ஏன், மேலே சொன்ன நாகரிகப் பெண்களைச் சேர்ந்த இதர நாட்டுப் பெண்கள் கூட—வாய் திறந்து மாழ்கினர்: வாய்விட்டு 'ஓ' என்று கதறி அழுதார்கள். தானமாலையும் அரக்கர்களும் அழுத அழுகை அந்தப் பெண்களைக்கூட உருக்கி அழச்செய்து விட்டது. தானமாலையை அவளது அரண்மனையில் சேர்த்து விட்டு, அவரவர்கள் வீட்டுக்குப்போன பெண்களும் மாழ்கினர்.]

சோகத்தைப் பார்த்தால் யாரையும் அழச் செய்துவிடும். அனுதாபம் பட வேண்டாதவர்களைக் கூடப் பாதித்துவிடும் என்பது குறிப்பு.

# டால்டாவில்

## பொரித்த மசாலாதிணித்த குடமிளகாய்களினால் உங்கள் உணவை அதிக சத்துடையதாகச் செய்யுங்கள் !

தேக ஆரோக்கியத்திற்கு அவசியமான தாதுப்பொருள்களும், விடமின்களும் குடமிளகாய்களிலிருக்கின்றன. அவைகளை இப்படி தயாரித்து சாப்பிடுங்கள். முதலாவதாக, மிளகாய்களை நீராவியில் வெந்து காம்பு பாகத்தை நறுக்கி விதைகளை அகற்றவும். பிறகு வேகவைத்த பட்டாணி, காரட் அல்லது வெந்து பொடிசெய்த முட்டை, வெந்து உதிர்த்த உருளைக்கிழங்கு அல்லது வெந்து அருவப்பட்ட மாமிசம் இவைகளுடன் அரிந்து வதக்கிய வெங்காயம், நறுக்கிய இஞ்சி, கொத்தமல்லி இலை, கடுகு, உப்பு, எலுமிச்சஞ்சாறு இவைகளை கலந்து மசாலா செய்து அதனுள் திணிக்கவும். காம்பு பாகத்தை மிளகாய்களின் மேல் வைத்து குச்சிகளினும் பொருத்தவும். குழிவுகுறைந்த வாணலியில் டால்டாவை சூடாக்கி அதில் மிளகாய்களை பக்குவமாகும்வரை பொரிக்கவும்.

டால்டா ஒரு சுத்தமான தாவரக்கொழுப்பாகையால் அது அதிக நேரம் சூட்டைத்தாங்குகிறது—எனவே, உணவுகள் ஒழுங்காக முழுவதும் பக்குவமாவதற்கு போதுமான சாவகாசம் அளிக்கிறது.

எதிர்பாராத அதிதிகளுக்கு
நொடிப்பொழுதில் உணவு !

இலவச ஆலோசனைகளுக்கு இன்றே—அல்லது என்று வேண்டுமானாலும்—எழுதுங்கள் !

**தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்**

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1






"என்ன யோசனை செய்து கொண்டிருக்கிறீர்கள்?"

வெளியே கொட்டிக் கொண்டிருந்த மழையைப் பார்த்தவாறு ஜன்னலோரமாக உட்கார்ந்திருந்த பாஸ்கரன் வனஜாவின் குரலைக் கேட்டதும் திடுக்கிட்டுத் திரும்பினான். "யோசனை பலமாயிருக்கிறதே!" என்று சிரித்தாள் வனஜா.

"யோசனை ஒன்றுமில்லை. மழையை ரசித்துக் கொண்டிருக்கிறேன், அவ்வளவுதான்" என்றான் பாஸ்கரன்.

"இந்த ஹல்வாவுக்கு உப்புப் போதுமா என்று ருசி பார்த்துச் சொல்லுங்கள்!" என்று விஷமமாகக் கூறி வனஜா கையில் கொண்டு வந்திருந்த சிறிய தட்டை அவன் முன் நீட்டினாள்.

"நைவேத்தியம் ஆவதற்கு முன்பா?"

"பண்டிகை பக்ஷணத்திற்கு நைவேத்தியம் ஏது? நைவேத்தியமெல்லாம் இந்த வாய்க்குத்தான்" என்று கூறிச் சிரித்தவாறே தட்டிலிருந்ததை அவன் வாயில் ஊட்டினாள் வனஜா.

"உப்பு கொஞ்சம் குறைவாகத்தான் இருக்கிறது" என்றான் பாஸ்கரன்.

"அடுத்த தடவை நீங்களே பார்த்து வேண்டிய அளவு போட்டு விடுங்கள்" என்று கூறிப் பெருமிதத்துடன் வனஜா உள்ளே செல்ல ஆரம்பித்தாள்.

"மணி பத்தாகிறது. இன்னுமா பாக்கி இருக்கிறது?" என்றான் பாஸ்கரன்.

"இன்னும் அரைமணி நேரத்தில் எல்லாம் முடித்துக் கொண்டு வந்துவிடுகிறேன்" என்று பரபரப்புடன் அங்கிருந்து மறைந்தாள் வனஜா.

வெளியே மழை சோனாமாரியாகக் கொட்டிக் கொண்டிருந்தது. சாயங்காலத்திலிருந்தே வானம் மப்பும் மந்தாரமுமாகப் பிசு பிசு வென்று தூற்றல் போட்டுக் கொண்டுதான் இருந்தது. எட்டு மணிக்குத் திடீரென்று பலமாகப் பிடித்துக் கொண்ட மழை இன்னும் வலுத்துக் கொண்டிருந்ததே ஒழியக் குறையவில்லை. ஏற்கெனவே மங்கலாகவிருந்த தெரு விளக்குகள் அந்த மழையில் இன்னும் மங்கலாகத் தோற்றமளித்தன. மறுநாள் பொழுது விடியும்வரையில் காத்திருக்கப் பொறுமையில்லாத சிலர் மழையையும் பொருட்படுத்தாமல் பட்டாசுக் கட்டுகளைக் கொளுத்தி வீசிக் கொண்டிருந்தனர். ஆத்திரக்காரன் பேச்சைப்போல் படபட வென்று வெடிக்க ஆரம்பித்து, மழையின் சளசளப்பில் அரைகுறையாய் நின்றுவிடும் பட்டாசுச் சத்தம் ஏதோ அர்த்தமற்ற ஏமாற்ற உணர்ச்சியை பாஸ்கரன் மனதில் தூண்டிவிட்டுக் கொண்டிருந்தது. அந்த சமயம் உள்ளே வனஜா செய்து கொண்டிருந்த பட்சணத்தின் ரம்யமான வாசனை

நிஜமான இன்ப உணர்ச்சியை அவன் மனத்தில் நிரப்பியது. அந்த இன்ப உணர்ச்சியோடு பொழுது விடிந்தால் தீபாவளி என்ற நினைவும் சேர்ந்து கொண்டால் கேட்க வேண்டுமா? அப்படியிருந்தும் இப்போது மனத்தில் வந்து கப்பிய வேதனை உணர்ச்சியை அகற்ற முடியவில்லையே!

கலகலவென்று சிரித்துக் கொண்டே உள்ளேயிருந்து ஓடி வந்தாள் வனஜா. "நீங்கள் தான் வந்து அந்த ஜன்னல் கதவை மூடுங்களேன்! உள்ளெல்லாம் ஜலமயமாகி விடும் போலிருக்கிறது!" என்று கூறி பாஸ்கரனை அழைத்துக்கொண்டு உள்ளே விரைந்தாள். அவள் முகத்தில் சுடர்விட்ட குதூகலத்தைக் கவனித்தவாறே ஜன்னலை மூடினான் பாஸ்கரன்.

அந்த மோகன உருவத்தைப் பார்த்தவாறு அலைமோதும் இதயத்துடன் சற்று நேரம் நிலைப்படியிலேயே நின்றான் பாஸ்கரன். பின்பு ஒரு நீண்ட பெருமூச்சுடன் அங்கிருந்து கூடத்திற்குச் சென்று பழைய இடத்தில் உட்கார்ந்து கொண்டான்.

வனஜாவின் குதூகலம் அவன் நெஞ்சை வாட்டியது. விஷயம் தெரிந்தால் அவள் மனம் என்ன பாடு படும்! அவளிடம் எப்படிச் சொல்வது? அன்று அவன் ஆபீசில் இருக்கும்போதுதான் அந்தக் கடிதம் அவன் கையில் கிடைத்தது. இப்போது கூட அது அவன் சட்டைப் பையிலேயே தான் இருந்தது. அவசரம் அவசரமாக அதை எடுத்து மீண்டும் ஒரு முறை படித்துப் பார்த்துவிட்டுச் சட்டைப் பையில் வைத்துக் கொண்டான். நல்லவேளை, அது அவன் ஆபீஸ் விலாசத்திற்கு வந்திருந்தது. வீட்டு விலாசத்திற்கு வந்திருந்தால் இதற்குள் வனஜாவுக்கும் அந்த விஷயம் தெரிந்திருக்கும். பிறகு...... அந்த நிலைமையைக் கற்பனை செய்து பார்க்கவே அவன் மனம் பெரிதும் கலங்கியது.

வெளியே மழை சற்றுக் குறைய ஆரம்பித்திருந்தது. 'சோ' வென்ற சத்தத்தின் சுருதி சிறிது தணிந்து ஒலித்ததை உணர்ந்து அர்த்தமற்ற ஒரு வகைப் பரபரப்பு பாஸ்கரன் மனதில் உண்டாகியது. இரவு முழுதும் அப்படியே மழை கொட்டிக் கொண்டிருக்க வேண்டும் என்று நினைத்தானோ என்னவோ! மழையின் இரைச்சலில் தன எண்ணங்களுக்குப் பக்க பலம் தேட நினைத்தானோ? மழைச் சத்தம் குறையக் குறைய நெருங்கிய நண்பன் யாரோ தன்னைத் தனிமையில் விட்டுப் பிரிந்து செல்வது போன்ற தவிப்பை அவன் உணர்ந்தான். அவன் தவிப்பை மழை லட்சியம் செய்ததாகத் தோன்றவில்லை. சிறிது சிறிதாகக் குறைந்து கடைசியில் நின்றே விட்டது. மாடி ஜலதாரையிலிருந்து தண்ணீர் கொட்டும் சத்தமும் தேய்ந்து கூரையிலிருந்து வடிந்து சொட்டும் நீர்த்துளிகளின் சத்தமே மிஞ்சியது.

"மழை முழுவதும் நின்றுவிட்டது போலிருக்கிறதே!" என்று கேட்டுக் கொண்டே உள்ளிருந்து குதித்தோடி வந்தாள் வனஜா. நெஞ்ச ஆழத்திலிருந்து எழுந்த பெரு மூச்சை அடக்கிக் கொண்டு அவள் பக்கம் திரும்பினான் பாஸ்கரன். "என் வேலையும் முடிந்தது, மழையும் நின்றது" என்று கூறியவாறு வனஜா ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு பாஸ்கரனுக்கு அருகே வந்து உட்கார்ந்து கொண்டாள்.

"உனக்குத் தூக்கம் வரவில்லையா?" என்றான் பாஸ்கரன்.

"தூக்கம் எங்கிருந்து வரப்போகிறது?" என்று சிரித்தாள் வனஜா.

"நாளைத் தீபாவளிக்கு இன்று சிவராத்திரி போலிருக்கிறது."

"ஏன், உங்களுக்குத் தூக்கம் வருகிறதா?"

"உனக்கே வராத தூக்கம் எனக்கு ஏது?"

"நான் தூங்கு மூஞ்சி என்றுதானே சொல்லுகிறீர்கள்?"

"உனக்கு இன்று வேலை அதிகமில்லையா? களைத்துப் போயிருப்பாய் என்று சொன்னேன்."

"எனக்கிருக்கும் குதூகலத்தில் களைப்பு எங்கிருந்து உண்டாக முடியும் சொல்லுங்கள்" என்று கூறி வனஜா நாற்காலியிலிருந்து எழுந்து பாஸ்கரனுடைய நாற்காலியின் கைப்பிடியில் வந்து உட்கார்ந்து கொண்டாள். பாஸ்கரன் அன்புடன் அவளுடைய கையைப் பற்றிக் கொண்டான். அந்த சமயம் ஜன்னல் வழியே சாரலுடன் கலந்த குளிர்ந்த காற்று வீசவும் வனஜா இன்னும் நெருங்கி உட்கார்ந்து கொண்டாள். "மழை மறுபடியும் ஆரம்பிக்கும் போலிருக்கிறது" என்று கூறிக்கொண்டே பாஸ்கரன் எழுந்து சென்று ஜன்னல் கதவைச் சாத்திவிட்டு வந்து உட்கார்ந்தான்.

"ஒவ்வொரு தீபாவளிக்கும் இப்படித்தான் மழை கொட்டுமோ?" என்றாள் வனஜா.

"மற்ற தீபாவளியைப்பற்றி எனக்கு நினைவில்லை. ஆனால் இந்த தீபாவளி விசேஷமில்லையா? அதனால்தான் போலிருக்கிறது!"

வனஜா சிரித்தாள்: "கல்யாணமாகி ஐந்து வருஷமாகியும் நாம் சேர்ந்து கொண்

டாடும் முதல் தீபாவளி இதுதான் என்ருல் யாராவது நம்புவார்களா!"

"உன்னுடைய குதூகலத்தைப் பார்த்த பிறகு யார்தான் நம்பாமலிருக்க முடியும்!" என்ருன் பாஸ்கரன் அவளது கன்னத்தை வருடியவாறே.

"பொழுது விடியும்வரை தூங்க வேண்டுமே என்றிருக்கிறது. மழை இல்லாதிருந்தால் ராத்திரி முழுதும் மனம்போனபடி வெளியே சுற்றிக் கொண்டிருக்க வேண்டும் என்றுசொல்லியிருப்பேன்" என்ருள் வனஜா.

"விசித்திரமான பெண்!" என்று அவள் கன்னத்தில் செல்லமாகத் தட்டினுன் பாஸ்கரன்.

"இருங்கள், இன்னும் பத்தே நிமிஷத்தில் வந்து விடுகிறேன்" என்று கூறி எழுந்தாள் வனஜா.

"எல்லா வேலையும் முடிந்து விட்டதென்று சொன்னுயே!"

"உள்ளெல்லாம் சுத்தம் செய்து கோலம் போடுவதுதான் பாக்கி. கண் மூடித் திறப்பதற்குள் ஆகிவிடும்."

"ஓகோ! கண் மூடித் திறக்கப் பத்து நிமிஷம் ஆகும் போலிருக்கிறது!" என்று சிரித்தான் பாஸ்கரன். வனஜாவும் சிரித்துக் கொண்டே உள்ளே ஓடி மறைந்தாள்.

* * *

பாஸ்கரனின் எண்ணங்கள் வேறு திசையில் பாய்ந்தன. மற்ற நாட்களைப் போலத்தானே பண்டிகையும்! என்றும் போல்தான் அன்றும் சூரியன் உதித்து மறைகிருன். காற்று என்றும் போல்தான் வீசுகிறது. பக்ஷிகள் கத்துவதிலும் மாறுதல் இல்லை. இயற்கையின் எல்லா வேலைகளும் வழக்கம்போல்தான் நடக்கின்றன. நாம் மட்டும் அன்று பிரமாதமாக என்ன செய்து விடுகிறோம்? மிஞ்சிப்போனுல் ஏதேனும் புதுத் துணி உடுத்திக் கொண்டு விசேஷமாக ஏதேனும் பண்டம் பணியாரம் செய்து சாப்பிடுகிறோம். கடைசியில் புதுத் துணிக்கும் விசேஷச் சாப்பாட்டுக்கும்தாஞ இவ்வளவு ஆர்ப்பாட்டமெல்லாம்? ஆசைப் பட்டால் மற்ற நாட்களிலும் இவை கிடைக்காதா என்ன? அப்படியிருந்தும், பண்டிகை என்ற நினைவுக்கு மனத்தைக் குதூகலத்தில் ஆழ்த்தும் மாய சக்தி எங்கிருந்து வந்தது?

பாஸ்கரன் சம்பந்தப்பட்டமட்டில் அந்தப் பண்டிகைக்கு விசேஷ அர்த்தம் இருக்கத்தான் செய்தது. உண்மையில் பார்க்கப் போனுல் தீபாவளி அவனது புது வாழ்வின் ஆரம்பம் என்று கூடச் சொல்லலாம். வனஜாவை அவன் முதல் முதல் பார்த்தது ஒரு தீபாவளி யன்றுதான். அச் சமயம் அவன் எஞ்ஜினியரிங் கல்லூரியில் கடைசி வருஷம் படித்துக் கொண்டிருந்தான். அந்த வருஷம் பண்டிகைக்கென்று மூட்டை கட்டிக்கொண்டு ஊருக்குப் போக அவன் விரும்பாததால் அவன் மாமா அவனைத் தன்னுடன் வந்து பண்டிகை கொண்டாடும்படி அழைத்திருந்தார். டெல்லியில் பெரிய உத்தியோகத்திலிருந்த அவர் இரண்டு மாதத்துக்கு முன்புதான் வேலையிலிருந்து விலகி வந்து மாம்பலத்தில் பங்களா வாங்கிக் கொண்டு அதில் குடியேறியிருந்தார். சோலைபோல் பூத்துக் குலுங்கும் அழகுடன் மாம்பலத்திற்கே உரியதான அமைதி நிறைந்த தெருவொன்றில் அவரது பங்களா அமைந்திருந்தது. சிறியதுதான். ஆனுல் சுற்றிலும் தோட்டத்தோடு சகல சௌகரி





"ஏன் அப்பா! நீ உன் எஜமானரை வாயில் வந்தபடியெல்லாம் திட்டி விட்டாயாமே!"

"இல்லவே இல்லிங்க எசமான்! அவரு ஒரு கேள்வி கேட்டாரு. அதற்குப் பதில் சொன்னேனுங்க. அவ்வளவுதானுங்க!"

"அவர் அப்படி என்ன கேள்வி கேட்டு விட்டார்?"

"'நீ என்னை யார் என்று நினைத்தாய்?' என்று கேட்டாருங்க. அதற்குத்தான் நான் பதில் சொன்னேனுங்க."

யங்களும் அதில் நிறைந்திருந்தன. மாமாவுக்கு அதைவிடப் பெரிய இடமும் தேவையில்லை. உத்தியோகத்திலிருந்து மட்டுமல்ல; வேறு குடும்பப் பொறுப்புகளிலிருந்தும் அவர் விடுதலை பெற்ற மாதிரிதான். இரண்டு பெண்களையும் நல்ல இடங்களில் மணம் செய்து கொடுத்துவிட்டார். பிள்ளைகள் இரண்டு பேருக்கும் டெல்லியிலேயே நல்ல வேலை தேடிக் கொடுத்து வேரூன்றச் செய்திருந்தார்.

அவரது சிறிய லைப்ரரியில் கண்ட கண்ட புத்தகங்களுக்கெல்லாம் இடம் கிடையாது. அபூர்வமான இலக்கிய சிருஷ்டிகள் என்று போற்றத்தகுந்த பொறுக்கி எடுத்த சில புத்தகங்களே அதை அலங்கரித்தன. மாறுதலற்ற சர்க்கார் உத்தியோகத்தில் ஊறிப் போயிருந்த அவரிடம் இவ்விதக் கலைப் பண்பு இருந்தது ஆச்சரியமே. அந்தக் கலைப் பண்போடு உத்தியோக சேவை கற்பித்திருந்த கண்டிப்பும் சேர்ந்து அவரது சுபாவத்திற்கு ஒரு விசித்திரத் தன்மை அளித்து விட்டது. அப்படிப்பட்ட மாமா தம் வீட்டில் தீபாவளிப் பண்டிகை கொண்டாடும்படி அவனை அழைத்தது கூட ஏதோ ஒரு உத்தேசத்துடன்தான் இருக்கும் என்றே பாஸ்கரனுக்குத் தோன்றியது.

தான் நினைத்தது சரிதான் என்பதை பாஸ்கரன் மறுநாள் அறிந்தான். கங்கா ஸ்நானம் ஆன பிறகு காலை ஆகாரத்தை முடித்துக் கொண்டு அவனும் மாமாவுமாக முன்புறத்து ஹாலில் உட்கார்ந்து பேப்பர் படிப்பதில் ஈடுபட்டிருந்தபோது திடீரென்று பட்டு உடையின் சல சலப்புச் சத்தம் கேட்டு இருவரும் தலை நிமிர்ந்தனர். பண்டிகையின் மங்களத் தன்மையே உருவானது போன்ற ஓர் இளம் பெண் முகத்தில் மலர்ந்த சிரிப்புடன் உள்ளே வந்து கொண்டிருந்ததைப் பார்த்ததும் பாஸ்கரனுக்கு மூச்சே நின்றுவிடும்போல் ஆகி விட்டது.

"என்ன உஷா, கங்கா ஸ்நானம் ஆச்சா?" என்று மாமா சிரித்துக்கொண்டே கேட்டவுடன் அந்தப் பெண், "நமஸ்காரம் பண்ணுகிறேன், மாமா," என்று கூறியவாறே முன் வந்து அவரை நமஸ்கரித்து விட்டுப் பரபரப்புடன் அங்கிருந்து செல்ல ஆரம்பித்தாள். ஆனால் மாமா அவளை விடவில்லை. 'இரண்டு பேர் உட்கார்ந்திருக்கும் போது ஒருவரை மட்டும் நமஸ்கரிப்பது என்ன மரியாதை?" என்று அவர் கேட்டதும் பாஸ்கரன் நிலைமை எக்கச் சக்கமாகி விட்டது. "வேண்டாம், வேண்டாம்" என்று அவன் தடுத்துச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே அந்தப் பெண் அவனையும் நமஸ்காரம் செய்து விட்டாள்.

"என்னப்பா, வலிய வந்து காலில் விழும் ஸ்ரீதேவியை வேண்டாமென்று சொல்கிறாயே!" என்று பரிகாசம் செய்தார் மாமா. பின்பு அந்தப் பெண்ணைப் பார்த்து, "இது யார் தெரியுமா, உஷா? உனக்கென்று நான் நிச்சயம் செய்திருக்கும் மாப்பிள்ளை இவர்தான்!" என்றார். மகிழ்ச்சியும் நாணமும் ஒருங்கே அலைபாயும் விழிகளால் பாஸ்கரனை ஒருமுறை பார்த்துவிட்டு அங்கிருந்து ஓடி மறைந்தாள் உஷா.

"இவள் எதிர் வீட்டுப் பெண். கண்யமான குடும்பம். தகப்பனார்கூட பர்மாவில் எஞ்ஜினியரா யிருந்து ரிடையரானவர்தான்" என்று விவரித்தார் மாமா. பின்பு "நான் அந்தப் பெண்ணிடம் சொல்லியது வேடிக்கைக்கென்று நினைத்துக் கொள்ளாதே. பெண்ணின் தகப்பனாரிடம் நான் எல்லாம் பேசி முடிவு செய்தாகி விட்டது. ஜாதகமும் பிரமாதமாகப் பொருந்தியிருக்கிறது. நீ பெண்ணைப் பார்ப்பதொன்றுதான் பாக்கியிருந்தது. அந்தக் குறையும் இப்போது

தீர்த்து விட்டது" என்றார். அவர் பேச்சைத் தட்டிச் சொல்ல பாஸ்கரனுக்கு வாயேது? அதற்கு அவசியம்தான் என்ன இருந்தது? அவன் உள்ளம் மாமாவின் கலையுணர்ச்சியை வாழ்த்துவதில் அல்லவா ஈடுபட்டிருந்தது!

மாமாவின் முயற்சி வீண் போகவில்லை. அந்த வருஷக் கடைசியிலேயே பாஸ்கரனுக்கும் வனஜாவுக்கும் கல்யாணம் நடந்தேறியது. வனஜாவின் அதிர்ஷ்டம்தான் என்று சொல்லும்படியாக பாஸ்கரன் பரீக்ஷையில் சிறப்புடன் தேறியதோடு, மேட்டூர்த் தேக்கத் திட்டத்தில் உதவி எஞ்சினியராக நியமனமும் பெற்று விட்டான்.

அதற்கடுத்த தீபாவளி எப்போது வரப்போகிறதென்று அவன் தவித்த தவிப்பு அவனுக்கல்லவா தெரியும்! அந்த நாளைப் பற்றி என்னென்னவோ இன்பக் கனவுகள் அப்போது அவன் மனதில் தோன்றி அவனை நிலை தடுமாறச் செய்து கொண்டிருந்தன. கடைசியில் தீபாவளியும் வந்தது. ஆனால் என்ன பிரயோஜனம்? தலை தீபாவளி கொண்டாடப்போகும் புது மாப்பிள்ளை உற்சாகத்துடனா அவன் மாமனார் வீடு சென்றான்? டைபாய்ட் ஜுரத்தில் படுத்த படுக்கையாய் உயிருக்கு மன்றாடிக் கொண்டிருந்த இளம் மனைவியை எப்படியாவது பார்த்தால் போதும் என்ற துடிப்புடன் அல்லவா சென்றான்! அந்த கண்டத்திலிருந்து வனஜா பிழைத்ததே மறு பிழைப்பென்று சொல்லும்படி ஆய்விட்டதே! தீபாவளிக்கு ஒரு வாரத்திற்கு முன்பு படுக்கையில் படுத்தவள் எழுந்து நடமாடும் சக்தி பெறுவதற்குத் தைமாதக் கடைசி வரை ஆகிவிட்டது. நடுங்கும் கையுடன் காகிதத்தில் அழுந்திப் பதியாத எழுத்துக்களில் அவள் இந்தச் செய்தியை அவனுக்கு எழுதும்வரை பாஸ்கரன் மனது என்ன பாடு பட்டுக் கொண்டிருந்தது! இப்போது நினைத்துக் கொண்டாலும் அந்த நாட்கள் ஒரு பயங்கரக் கனவுபோல் தோன்றின. எவ்வளவு பெரிய அபாயத்திலிருந்து தெய்வம் தன்னைக் காப்பாற்றியது என்று எண்ணும் போதெல்லாம் அவன் மனம் உணர்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்துவிடும். மயிரிழை தப்பியிருந்தால் அவன் வாழ்வு முடிவில்லாத பாலைவனமாக அல்லவா மாறியிருக்கும்!

முதல் தீபாவளி தட்டிப்போனதுலேயோ என்னவோ, அடுத்து வந்த தீபாவளிகளும் ஒவ்வொன்றாக அவர்களிருவரும் சேர்ந்து கொண்டாட முடியாமலே போய்க் கொண்டிருந்தன. மேட்டூர் உத்தியோகத்தில் ஆயாசங்களே நிறைதான் பாஸ்கரன். அதற்குள் வட இந்தியாவில் புதிதாக ஆரம்பிக்கப்பட்ட ஒரு மின்சார உற்பத்தித் திட்டத்தில் இன்னும் உயர்வும் பொறுப்புமுள்ள உத்தியோகம் கிடைக்கவே அவன் அதை ஏற்றுக் கொண்டு அங்கே சென்று விட்டான். மலைப் பாங்கான பிரதேசத்தில் ஆரம்பிக்கப்பட்டிருந்த அந்த வேலை பூர்த்தியடையும்வரை வனஜாவுடன் வாழ்க்கை நடத்துவதைப் பற்றி யோசிப்பதற்குக்கூட இடமில்லாது போயிற்று. ஒரு வருஷத்துக்குள் முடிந்துவிடும் என்று எதிர்பார்த்த வேலை இரண்டு வருஷம் இழுத்தடித்து விட்டது. இந்த இரண்டு வருஷ காலத்தில் நடுவில் ஒரு தடவை இருபது நாள் விடுமுறை பெற்றுக் கொண்டு சென்னைக்கு வந்திருந்தான்

"வனஜாவை அழைத்துக் கொண்டு போக எப்போது ஏற்பாடு செய்து கொள்ளப் போகிறாய்? அவள் இங்கே தனியே இருந்து ஏங்கும் ஏக்கத்தை என்னால் பார்க்க முடியவில்லை" என்று பரிகாசமாகவும் பாதி நிஜ அனுதாபத்துடனும் கூறினார் மாமா.

"நான் என்ன செய்வது சொல்லுங்கள்? அந்த உத்தியோகத்தை ஏன் ஏற்றுக் கொண்டோம் என்று இருக்கிறது இப்போது" என்றான் பாஸ்கரன்.

"வந்ததுதான் வந்தாய். இன்னும் இரண்டு மாதம் கழித்துத் தீபாவளி சமயத்



"இங்கே என்ன ஸார், இன்றைக்கு விசேஷம்?"

"வித்வான் தர்மலிங்கம் செட்டியாருக்கு நிதி முடிப்பு தருகிறார்களாம்!"

"அதற்கு நீங்கள் எங்கே வந்தீர்கள்?"

"அவர் எனக்குப் பணம் தர வேண்டும். அதை வசூல் செய்து கொண்டு போகலாம் என்று வந்தேன்!"

தில் இங்கு தங்குகிற மாதிரி லீவ் எடுத்துக் கொண்டிருக்கலாமே!" என்றார் மாமா.

"அதற்கென்று காத்திருந்தால் அப்புறம் லீவே கிடைக்காது" என்றான் பாஸ்கரன். வனஜாவோ, கணவன் அந்த இருபது நாட்களாவது வேலையிலிருந்து விடுபட்டு வர முடிந்ததே என்று குதூகலமடைந்தாள். "அந்த வேலை முடிய இன்னும் ஆறுமாதம் தானே ஆகுமென்று சொல்கிறீர்கள்! அதற்குப் பிறகு நம்ம பக்கத்திலேயே ஏதாவது உத்தியோகம் தேடிக் கொண்டு வந்து விடுங்கள்" என்றாள்.

"அப்படித்தான் நினைத்துக் கொண்டிருக்கிறேன்" என்றான் பாஸ்கரன்.

ஆனால் நாம் நினைக்கிறபடியே எல்லாம் நடந்து விட்டால் அப்புறம் வாழ்க்கை ஏது? விடுதலைக் காலமென்று எதை நினைத்திருந்தார்களோ அதுவே கொடிய சோதனைக் காலமாக முடிந்தது.

வனஜாவின் தந்தை ஜம்புநாதய்யர், பர்மாவுக்குச் செல்வதற்குச் சில நாட்களுக்கு முன்புதான் இரண்டாவது விவாகம் செய்து கொண்டிருந்தார். அவரது முதல் மனைவி இறந்து மூன்று வருஷங்கள் ஆகியிருந்தன. அவள் மூலம் அவருக்கு எட்டு வயதில் ஒரு பிள்ளை இருந்தான். அந்தப் பையனின் தாய் உயிரோடிருந்தபோதே அவளுடைய தமையன் அயல்கிராமத்திலிருந்து வந்து அந்தப் பையனைத் தன்னுடன் அழைத்துச் சென்று தன் வீட்டில் வைத்துக் கொண்டு சீராட்டுவது வழக்கம். தாயார் இறந்தபிறகு பையன் தாய்மாமன் வீட்டிலேயே தங்கி விட்டான். தாய் மாமனுக்கும் சந்தான பாக்கியம் இல்லாததால் அந்தப் பையனையே தம் ஸ்வீகாரப் பிள்ளை போல் ஏற்றுக் கொண்டு விட்டார். பையனைப் பற்றிய பொறுப்பு இவ்விதம் தன்னை விட்டு நீங்கியது பற்றி ஜம்புநாதய்யர் ஒருவித நிம்மதியுடனேயே பர்மா புறப்பட்டுச் சென்றார். பர்மாவுக்குச் சென்ற நான்கு வருஷம் கழித்துத்தான் வனஜா பிறந்தாள். அவளது இளம்பிராயம் முழுதும் பர்மாவிலேயே கழிந்தது. ஜம்புநாதய்யர் பர்மா வேலையிலிருந்து விலகிக் கொண்டு சென்னை திரும்பியபோது வனஜா பதினைந்து வயது மங்கையாயிருந்தாள். ஆனால் தன்னைவிடப் பன்னிரண்டு வயது பெரியவனான தமையன் ஒருவன் தனக்கு இருக்கும் விஷயம் அவளுக்குத் தெரியவே தெரியாது. அவளுக்கு விவரம் தெரிந்து ஒரு தடவைகூட ஜம்புநாதய்யர் அவளெதிரில் தன் மகன் சந்துருவைப் பற்றிப் பேச்செடுத்ததில்லை. அவள் தாயாரும் இது சம்பந்தமாக வனஜாவிடம் எதுவும் கூறியது கிடையாது. ஆனால் அவளுக்கு மட்டும் அந்தப் பிள்ளையைப் பற்றி என்ன தெரியும்? தன் விவாகத்தின் போது மூத்தவளுக்கு எட்டு வயதில் ஒரு பிள்ளை இருந்ததும் மூத்தாளின் தமையன் அப்பிள்ளையைத் தன் பராமரிப்பில் வைத்துக் கொண்டதும்தான் அவளுக்குத் தெரியுமே ஒழிய அதற்கு மேல் என்ன நடந்ததென்பது அவளுக்குத் தெரியாது. அதைப்பற்றி அறியவும் அவள் ஆவல் கொள்ளவில்லை. கணவன் அப்பிள்ளையைத் தாய்மாமன் பராமரிப்பில் விட்டு வந்ததற்குத் தன் மேலுள்ள அவநம்பிக்கைதான் காரணம் என்ற மனஸ்தாபம் அவளுக்கு உள்ளூற உண்டு. ஜம்புநாதய்யரும் அதை அறிவார்.

ஆகையால் தான் ஆரம்பத்திலிருந்தே வீட்டில் அந்தப் பிள்ளையைப் பற்றிய பேச்சு எழாமலே இருந்தது. உண்மையில் அந்தப் பேச்சு எழக்கூடாதென்றுதான் ஜம்புநாதய்யர் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார். ஏனெனில் காலாந்து வருஷத்துக்குச் சந்துருவைப் பற்றி அவருக்குக் கிடைத்த செய்திகள் நெஞ்சைக் கலக்குவனவாயிருந்தன. தாய் மாமன் இறந்து வீட்டில் நல்ல புத்தி சொல்வதற்குத் தகுந்த ஆளில்லாது போகவே, அவன் கெட்ட சகவாசத்தில் யாருக்கும் அடங்காத முரடனாகச் சுற்றி யலைகிறான் என்று அறிந்தபோது அவர் அடைந்த வேதனை கொஞ்ச நஞ்சமல்ல.

இந்த வேதனை இரண்டு மூன்று வருஷம் நீடித்த பிறகு இதையும் மிஞ்சக் கூடிய செய்தி வந்தது. சகாக்களுடன் ஏற்பட்ட ஒரு சச்சரவில் யாரையோ பலமாக அடித்துக் காயப்படுத்தி விட்டு போலீஸார் பிடித்துக் கொள்வார்களோ என்ற பயத்தில் எங்கோ ஓடி விட்டானென்றும் அப்புறம் அவனைப் பற்றிய தகவலே தெரியவில்லையென்றும் அறிந்து அவர் அனலில் விழுந்த புழுவாய்த் துடித்தார். தன்னிடமே பர்மாவுக்கு வந்தாலும் வந்து சேருவான் என்று ஒவ்வொரு சமயம் மனதில் ஒரு நம்பிக்கை தோன்றும். ஆனால் நாளடைவில் அந்த நம்பிக்கையும் தேய்ந்து விட்டது. அந்தப் பிள்ளை போனவன் போனவன்தான் என்ற முடிவு கட்டுவதைத் தவிர வேறு வழியில்லை. காலக்கிரமத்தில் அப்படி ஒரு பிள்ளை தனக்கு இருந்தான் என்ற நினைவையே மனத்தை விட்டு அகற்றி விடும் வைராக்கியம் அவருக்கு ஏற்பட்டு விட்டது. (அடுத்த இதழில் முடியும்.)

# படித்துப் பாருங்கள் !

## மோகினித் தீவு

ஜப்பான் படையெடுப்பின் போது பர்மாவிலிருந்து ஆயிரக்கணக்கான இந்தியர்களை ஏற்றிக் கொண்டு புறப்பட்ட ஒரு கப்பல், ஜப்பானியக் குரூஸர் ஒன்று அந்தப் பக்கம் வந்து கொண்டிருக்கும் செய்தி யறிந்து திசை மாறி மோகினித் தீவில் அடைக்கலம் புகுந்தது. கப்பலில் வந்த தமிழர் ஒருவர்—பாஸ்கரக் கவிராயர்—அந்த மரகதப் பசுந்தீவின் வனப்பைக் கண்டு களிக்கத் தீவினுள் நுழைந்து ஒரு குன்றின் மீது ஏறினார்.

தீவில் வரிசை வரிசையாக மணி மண்டபங்களும், கோயில் கோபுரங்களும், ஸ்தூபிகளும், விமானங்களும் காட்சி யளித்தன. ஏதோ ஒரு மாய சக்தி பாஸ்கரக் கவிராயரை மீண்டும் கப்பலுக்குப் போக வொட்டாமல் தடுத்தது.

பிறகு நவ யௌவனப் பிராயத்தினரான இளம் தம்பதிகள் இருவர் வந்து அவருக்கு அருகில் அமர்ந்து, எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னால் தமிழகத்தில் நடந்த நிகழ்ச்சிகளையும், தமிழ் நாட்டின் அற்புத சிற்பக் கலை அந்தத் தீவுக்கு எப்படி வந்து அதை ஒரு கலைக் களஞ்சியம் ஆக்கியது என்ற கதையையும் கூறினர்.

உத்தம சோழனின் புதல்வன் சுகுமாரனுக்குத் தன் புதல்வி புவன மோகினியை மணம் செய்விக்க எண்ணினான், மதுரையை ஆண்ட பராக்கிரம பாண்டியன். அதை விரும்பாத உத்தம சோழன் எள்ளி நகையாடினான். பாண்டியன் கோபங் கொண்டு சோழ நாட்டின் மீது படையெடுத்துச் சோழனைச் சிறைப்படுத்தினான். கொல்லி மலையில் அடைக்கலம் புகுந்திருந்த சுகுமாரன் பாண்டிய நாட்டில் பிரசித்தி பெற்ற தேவேந்திர சிற்பியின் வீட்டில் மாறு வேடத்துடன் சிற்பம் பயின்றான். பாண்டியன் குமாரி புவனமோகினியின் உதவியால் சுகுமாரன் தந்தையைச் சிறையிலிருந்து விடுவித்துப் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்தான். சோழப் படைகளை எதிர்த்துப் போரை நடத்திய புவன மோகினி கடைசியில் சிறைப்பட்டாள். சுகுமாரன் காதலுக்காக அரச வாழ்வைத் துறந்து, கடல் கடந்து, புவனமோகினியுடன் மோகினித் தீவுக்கு வந்து அங்கே தமிழ்க் கலைகளையும் தமிழர் பண்பாட்டையும் பரப்பிப் புது உலகை நிர்மாணித்தான்.

இந்தக் கதையை, நம் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேருவின் அறுபதாண்டு பூர்த்தி விழாவை முன்னிட்டு வெளியிடப்பட்ட "நேரு அபிநந்தன க்ரந்த்" என்னும் நினைவு மலருக்கு, ஆசிரியர் கல்கி விஷயதானமாக வழங்கினார். பாரத நாட்டின் பல்வேறு மாகாண மொழிகளின் இலக்கிய மேதைகள் எழுதிய கதைகள், கட்டுரைகள் அடங்கிய வாழ்த்து நூலில் தமிழர்களின் புராதனப் பண்பாட்டை நன்கு விளக்கும் இக்கதை வெளியாயிற்று. இப்போது புத்தக வடிவத்தில் அழகிய மோகன ரூபத்துடன் வெளிவந்திருக்கிறது.

பிரசுரம் : தமிழ்ப்பண்ணை, தியாகராயநகர், சென்னை; விலை : ரூ. 2—0—0; உயரிய பதிப்பு ரூ. 3—0—0.

## குழந்தைகளுக்குப் பிரசுரங்கள்

தமிழ் நாட்டுத் தம்பி தங்கைகளுக்காக ஜில் ஜில் என்னும் பத்திரிகை அழகிய அட்டையுடன் மாதாமாதம் ஜம் ஜம் என்று வெளி வந்து கொண்டிருக்கிறது.

இதைத் தவிர ஜில் ஜில் பதிப்பகத்தார் சிறு சிறு கதைப் புத்தகங்களையும் வெளியிடுகிறார்கள். ஆச்சரியம் மிகுந்த கதைகள் பல அழகிய படங்களுடன் புத்தகங்களாக வெளி வருகின்றன. இதுவரையில் சுமார் ஐம்பது புத்தகங்கள் வெளி வந்திருக்கின்றன. தற்போது பின் கண்ட புத்தகங்கள் நம்முடைய மதிப்புரைக்கு வந்திருக்கின்றன :

ஒரு அணாப் புத்தகங்கள் :—"பொம்மக்கா," "சைகுல்லா," "பூச்சாண்டி," "அதிர்வேட்டு," "துப்பாக்கி," "வைஜயந்தி," "ராஜா," "மாய ஜாலம்."

---

போலீஸ்காரர் :—என்னய்யா ! நீர் பாட்டுக்குச் சிவப்பு விளக்கைப் பார்க்காமலே சைக்கிளை விட்டுக் கொண்டு வருகிறீரே !

சைக்கிள்காரர் :—சிவப்பு விளக்கைப் பார்த்தேனுங்க ! நிழலிலே நீங்க இருப்பதைப் பார்க்கவில்லீங்க ! அதனால் தான் சைக்கிளை விட்டுக் கொண்டு வந்து விட்டேன் !



இரண்டு அணாப் புத்தகங்கள் :—"கண்ணு மூச்சி," "சிப்பாய் மகன்," "சூராதி சூரன்" "பூமா," "மலைத்தம்பி," "பப்பாய்த் திருடன்," "தங்கத்துரை," "சூறாவளி."

மூன்று அணாப் புத்தகம்:—"ரோஜாப்பூ."

மேற்படி புத்தகங்களுக்கு நம் மதிப்புரை இதுதான் :— "பலே பலே! பேஷ் பேஷ்!"

புத்தகங்கள் தேவையானவர்கள் "ஜில் ஜில் பதிப்பகம், தபால் பெட்டி எண். 1793, சென்னை" என்ற விலாசத்திற்கு எழுதித் தருவித்துக் கொள்ளலாம்.

## கல்பனா (ஹிந்தி பத்திரிகை)

'கல்பனா' என்னும் அழகிய பெயரைத் தாங்கி, இலக்கிய சேவையையே குறிக்கோளாகக் கொண்டு இரண்டு மாதங்களுக்கு ஒரு தடவை ஹைதராபாத்திலிருந்து வெளி வரும் பத்திரிகை இது. இலக்கிய வளம் பெற்ற தென்னிந்திய மொழிகளின் அருமை—பெருமைகளை வட நாட்டவர்களுக்கு எடுத்துரைக்கும் பொறுப்பை இந்தப் பத்திரிகை ஏற்றுக் கொண்டிருக்கிறது. புது மொழியும் பொது மொழியுமாகிய ஹிந்தியின் உருவத்தையே நிர்மாணிக்கும் பொறுப்பு தென்னிந்தியர்களுக்குத் தான் இருக்கிறது என்று நம் அரும் பெரும் தலைவர்கள் சொல்லும் பணியையும் ஏற்றுக் கொண்டு முன் வந்திருக்கும் இந்தப் பத்திரிகை வடநாட்டவர்களுக்கு மட்டும் அல்ல; ஹிந்தி தெரிந்த தென்னிந்தியர்களுக்கும் மிகவும் பயன்படக் கூடியது. கிடைக்குமிடம் :—

'கல்பனா' காரியாலயம்; 831, பேகம் பஜார், ஹைதராபாத். விலை : தனிப்பிரதி ரூ. 2. வருஷச் சந்தா ரூ. 12.

## ஸ்வப்ன வாசவதத்தம்

வடமொழியில் தலைசிறந்த நாடக ஆசிரியரான மகாகவி பாஸன் இயற்றிய இந்நாடகம் தமிழில் அழகாக மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. இயல், இசை, நாடகம் இம் மூன்றும் போட்டி போட்டுக் கொண்டு வரும் இந்நாளில் இத்தகைய நூல் அத்தியாவசியம் என்பது சொல்லாமலே தெரியும். படித்துப் பார்ப்பதோடு இந்த நாடகத்தை நடித்தும் பார்க்கலாம். மற்றப்படி மகாகவி பாஸனைப் பற்றியோ, மிகப் பழைய மொழியான வடமொழியைப் பற்றியோ, தொன்று தொட்டுவரும் நாடகத்தைப் பற்றியோ நாம் என்ன சொல்லக் கிடக்கிறது?

ஆசிரியர்: ஸ்ரீ. ஹரிஹர சாஸ்திரி; பிரசுரம்: கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர், சென்னை; விலை: 0—12—0

# பாதிக் கோபம்

ராஜு, சின்னப் பையன் தான். ஆனாலும், அவனுக்கு வருகிற கோபம் கொஞ்ச நஞ்சமல்ல.

அவன் எது கேட்டாலும், உடனே வாங்கித் தந்துவிடவேண்டும். இல்லாவிட்டால் வீடு இரண்டு பட்டு விடும்.

ஒரு நாள் அவன் மாமா வீட்டுக்கு வந்திருந்தார். அன்று ராஜு அம்மாவைப் பிஸ்கோத்தோ, மிட்டாயோ வாங்கித் தரும்படி கேட்டான். "அப்புறம் ஆகட்டும்" என்று அம்மா சொன்னாள். உடனே அவன் பண்ணிய ரகளை, வீடே அதிர்ந்து விடும் போலாகி விட்டது. இதைப் பார்த்த மாமா, "ராஜு, இனிமேல் உனக்குக் கோபம் வந்தால் ஒன்றிலிருந்து பத்து வரைக்கும் எண்ணு. உன் கோபம் எல்லாம் பட்டாய்ப் பறந்து விடும்" என்றார்.

"ஆகட்டும் மாமா!" என்று மாமாவுக்கு வாக்களித்தான்.



ஆமாம், ராஜுவுக்குத் தன் மாமாவின் மீது ஒரு தனியான அன்பு. அவர் சொல்லுகிறபடியெல்லாம் கேட்பான்.

நான்கு நாள் கழித்து மறுபடியும் ராஜுவின் மாமா வந்தார். வந்ததும் வராததுமாக, "ராஜு! உன் கோபம் எப்படியடா இருக்கிறது?" என்று கேட்டார்.

"மாமா! முன் போல அவ்வளவு கோபம் வருவதில்லை. அதில் பாதி தான் வருகிறது" என்றான் ராஜு.

"அது ஏன்?" என்றார்.

"எனக்கு அஞ்சு வரைக்குந்தானே எண்ணத் தெரியும்?" என்றான் ராஜு.

இதைக் கேட்டதும் மாமா 'கொல்' என்று சிரித்தார். ராஜுவுக்கு மாமா சிரிப்பதின் காரணம் புரியவில்லை! —வேங்கு.




## 5. தாடிச் சாமியார்

நேராக ராஜு அவனுடைய வீட்டுக்குத்தான் வந்திருப்பான் என்று நினைத்து, ராஜுவின் வீட்டுக்கு வந்தான் பாலன். வாசற்படி ஏறும் போதே "ராஜு! பலே வேலை செய்தாய்?" என்று ஆர்ப்பரித்துக் கொண்டே நுழைந்தான்.

எதிரே வந்த ராஜுவின் பாமி, பாலனைப் பார்த்துவிட்டு, "ஏண்டா பாலா! நீ மட்டும் தனியாக வருகிறாய்? ஆச்சரியமாக இருக்கிறதே! எங்கேடா உன் ஆப்த நண்பன் ராஜு?" என்று கேட்டாள்.

"இங்கே இன்னும் வரவில்லையா?" என்று கேட்டு அசந்து நின்றான் பாலன்.

சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனை விட்டுப் பம்பாய் செல்லும் எக்ஸ்பிரஸ் நகர்ந்தது. அதில் இரண்டாம் வகுப்பு ஒன்றில் ராஜு இருந்தான். டிக்கட் இல்லாமல் ஏறி இருந்த அவன், பிறகு தான் அது இரண்டாம் வகுப்பு என்று புரிந்து கொண்டான்.

தாடிச் சாமியார் ஒருவர் பருத்த தொப்பையைத் தடவிக் கொண்டே அதில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். அவரது இடுப்பு வரை நீண்டு தொங்கிய தாடி, கழுத்தில் கிடந்த சிவ, துளசி மணி மாலைகள், அவருடைய கண்கள் எதுவுமே ராஜுவுக்குப் பிடிக்கவில்லை. அடுத்த ஸ்டேஷன் வந்தவுடன் இறங்கி வேறு வண்டிக்குப் போய்விடலாமா என்று கூட நினைத்தான்.

பையன் தன்னைப் பார்த்து விழித்ததைப் பார்த்து விட்டுத் தாடிச் சாமியார், "பையா! உன் பேர் என்ன? ஏன் இப்படிப் பயப்படுகிறாய்? உன்னைப் பார்த்தால் டிக்கட் வாங்காத பையன் போல் இருக்கிறதே!" என்று கேட்டார்.

"ஆமாம்! டிக்கட் வாங்கவில்லை! என்னிடம் பணமில்லை. என் பேர் ராஜு" என்று சற்றுத் தைரியமாகவே சொன்னான் ராஜு.

"ராஜு! நல்ல பெயர்! டிக்கட் வாங்காவிடில் பரவாயில்லை! பயப்படாதே! டிக்கட் பரிசோதகர் வந்து கேட்டால் நான் அவரைக் கவனித்துக் கொள்ளுகிறேன். நீ எங்கே போகிறாய்? இப்படி வந்து என்னருகே உட்

கார்'' என்று ராஜுவை அன்புடன் அருகில் அழைத்தார். அந்தப் பெட்டியில் அவரைத் தவிர வேறுயாருமில்லை.

ராஜு யோசித்தான்: "அருகில் சென்று உட்காரலாமா? வேண்டாமா?'' என்று.

"நான் பாட்டி வீட்டுக்குப் போகிறேன். அரக்கோணத்தில் இறங்க வேண்டும்'' என்று சொல்லி விட்டு அவருக்கு எதிரில் இருந்த இடத்தில் உட்கார்ந்தான். வழ வழ வென்று இருந்த அந்த இரண்டாம் வகுப்பு ஆசனம் அவனுக்கு ரொம்பப் பிடித்து இருந்தது.



"ராஜு! உன்னைப் பார்த்தால் ரொம்பக் களைப்பாகக் காணப்படுகிறாயே! ஏன், நீ ஒன்றுமே சாப்பிடவில்லையா?'' என்று கேட்டார்.

"ஆமாம்!'' என்றான் ராஜு. அவனுக்கு வாஸ்தவமாகவே பசித்தது.

சாமியார் பட்சண மூட்டை ஒன்றை அவிழ்த்தார். அதில் லட்டு, ஜிலேபி, மைசூர்ப்பாகு எல்லாம் இருந்தன. ராஜுவுக்கு அதைப் பார்த்தவுடன் அப்படியே தன்னிடம் தந்துவிட மாட்டாரா என்று நாக்கில் நீர் ஊறிற்று.

சாமியார் லட்டு ஒன்றை எடுத்து ராஜுவிடம் கொடுத்தார். ராஜு லட்டுவைப் பெற்றுப் புட்டு 'லபக்' கென்று விழுங்கினான். சில நிமிஷங்களுக் கெல்லாம் அவனுக்கு மயக்கம் வருவது போல இருந்தது. மயங்கி விழுந்து விட்டான்.

'சட்'டென்று சாமியார் பட்சணப் பொட்டலத்தைப் பெட்டியில் வைத்து விட்டு ஜன்னல் கதவுகளை அவசரமாக மூடினார். மயங்கி விழுந்த பாலுவைத் தம்முடைய படுக்கையை விரித்து அதில் கிடத்தினார். அவர் முகத்தில் அர்த்த புஷ்டியுடன் கூடிய புன்னகை ஒன்று அரும்பிற்று. தன் பையில் போட்டிருந்த ஒன்றரை டிக்கெட்டுகளும் பத்திரமாக இருக்கின்றனவா என்று தடவிப் பார்த்துத் திருப்திப் பட்டுக் கொண்டார். டிக்கெட்டுகள் "கங்காபூர்" ஸ்டேஷனுக்கு வாங்கப் பட்டிருந்தன.

* * *

அவர் ஒரு போலிச் சாமியார். பல சிறுவர், சிறுமிகளை இப்படித்தான் மயக்கி வைறதராபாத்தில் ஒரு திருட்டுக் கோஷ்டியினருக்கு விற்று விடுவது வழக்கம். வெகு நாட்களாக இந்தக் கபட வேஷம் தாங்கி நடித்து வருகிறார். இப்போது ராஜு அவர் வலையில் அகப்பட்டுக் கொண்டான்.

கங்காபூர் ஸ்டேஷன் வந்ததும் மயக்கத்திலிருந்த ராஜுவைத் தோளில் சுமந்துகொண்டு சாமியார் இறங்கினார். தயாராக வந்து காத்திருந்த மூடு மோட்டார் ஒன்று ராஜுவை அவரிடமிருந்து பெற்று, ஏற்றிக் கொண்டு எங்கேயோ பறந்தது!

## 6. தந்தியும் டெலிபோனும்

இருட்டு வந்தது. நேரமாக ஆக ராஜுவின் மாமிக்குக் கவலை ஏற்பட்டது. கொஞ்ச நாட்களாக இஷ்டப்படி அவன் ஊர் சுற்றிவிட்டு எப்போது வேண்டுமானாலும் வீடு திரும்பிக் கொண்டிருந்தான் ராஜு. இந்த மாதிரி வேறு எந்தப் பையனாவது செய்தால், அவனை அவன் வீட்டார் கோபித்துக் கொள்வார்கள். ராஜுவின் மாமி அவனைக் கோபித்துக் கொள்ளவில்லை. அவனிடம் அவளுக்குத் தனிப் பிரியம் உண்டு. அவன் பொல்லாத்தனம் அவளுக்குப் பிடித்து இருந்தது. வெறும் துஷ்டனாக மட்டும் இல்லாமல் படிப்பிலும் கெட்டிக்காரனாக இருந்ததால் அவள் கண்டிப்பது இல்லை.

அன்று இரவு பத்து மணி ஆகியும் வீடு திரும்பவில்லை ராஜு. அவளுக்கு வீட்டில் இருப்புக் கொள்ளவில்லை. பாலன் வீட்டுக்கு நடையாக நடந்தாள். பள்ளிக்கூட வாசலில் நடந்த அவ்வளவு போராட்டங்களையும் பாலன் சொன்னான். பிறகு சக்கு சொன்னதையும் கூறினான்.

மாமிக்குத் தூக்கி வாரிப் போட்டது. மாமா ஊரில் இல்லாதபோது இப்படி ஆகிவிட்டதே என்று தவித்தாள். தன்னை நம்பி விட்டிருக்கிற அவனுடைய அப்பா-அம்மா ராஜுவைக் காணோம் என்று அறிந்தால் தன்னைச் சும்மா விட்டுவிடுவார்களா என்று பதறினள். அவளுக்கு அழுகை அழுகையாக வந்தது.



"ஏண்டா, பாலா! இதெல்லாம் என்ன கூத்து? உனக்குப் பரிந்து கொண்டு அவன் சிவராமனோடு சண்டைக்குப் போவதாவது! பிறகு வீட்டுக்கு வராமல் இருப்பதாவது!" என்று கேட்டுப் பதறினள். பிறகு வேலைக்காரனை அழைத்துக் கொண்டு போலீஸ் ஸ்டேஷன், பீச் ஸ்டேஷன், ஒன்று விடாமல் தேடிப் பார்த்தாள். ஒரு துப்பும் கிடைக்கவில்லை.

"பள்ளிக்கூடம் போன ராஜு வீட்டுக்குத் திரும்பி வரவில்லை......" என்று பாலன் பெற்றோர்களுக்குத் தந்தி அடித்தான். மதுரைக்குப் போயிருக்கும் தன் கணவருக்கும் உடனே புறப்பட்டு வரும்படி இன்னொரு தந்தி அடித்தாள். "மாமி!" என்று கதவைத் தட்டிக் கொண்டு எந்த நிமிஷமும் ராஜு திரும்பி வந்து விட மாட்டானா என்று ஆவலுடன் எதிர் பார்த்தாள். அதே பரபரப்பும், துடிதுடிப்பும் பாலனுக்கும் இருந்தது.

"ராஜு! நீ எங்கே இருந்தாலும் எனக்காக உடனே திரும்பி வந்து விடு. உன் மாமி முகத்தைப் பார்க்க என்னால் முடியவில்லை" என்று பிரார்த்தித்தான் பாலன்.

* * *

அதே சமயம் சிவராமன் அப்பா-போலீஸ் சப்—இன்ஸ்பெக்டர், 'ஸ்பெஷல் ட்யூட்டி' போட்டுக் கொண்டு ஹைதராபாத்துக்குப் போய்க் கொண்டிருந்தவர் கையில் இருந்த செய்திப் பத்திரிகை ஒன்றைப் பிரித்துப் பார்த்து விட்டு, "அடே!" என்று ஆச்சரியப்பட்டார்.

அதில் அச்சடிக்கப்பட்டிருந்தது:—

"...இன்று பிற்பகலிலிருந்து ராஜு என்ற பையனைக் காணோம்! பையனுக்குப் பன்னிரண்டு வயது; கட்டை குட்டையாய்ச் சிவப்பாக இருப்பான். கன்னத்தில் காயம் பட்ட வடு ஒன்று இருக்கும். இப்போது அடிக்கடி 'சிறுவர் திருட்டு' நடைபெறுகிறதே அதுபோல இதுவும் ஒன்றே என்று போலீஸார் சந்தேகிக்கிறார்கள்..."

"எந்த ராஜு? நம்ம தெருவில் இருந்தானே அவனு?" என்று திகைப்புடன் யோசித்துக் கொண்டே போனார். 'சட்'டென்று 'டிரங்கு' போனில் சென்னைப் போலீஸ் பிரதம ஆபீஸுக்குப் பேசினார்:—"இப்படிப் பட்ட இருட்டுக் கோஷ்டி ஒன்று ஹைதராபாத்தில் ஏதோ வொரு இடத்தில் பதுங்கி வேலை செய்கிறது என்று கேள்வி. நான் அங்கே 'காம்ப்' செய்து, கண்டு பிடிக்க முயற்சி செய்கிறேன். உதவிக்கு இன்னும் இரண்டு ஸி. ஐ. டி.க்கள் என்னுடன் அனுப்பி வைக்க வேணும்."

"வெற்றியுடன் திரும்பி வருக. தங்களுக்கு ஹைதராபாத் போலீஸும் வேண்டிய உதவிகளைச் செய்யும்" என்று சிவராமனின் அப்பாவுக்குப் பெரிய போலீஸ் அதிகாரியிடமிருந்து மறுமொழி கிடைத்தது.

## 7. பயங்கரப் பாதாள அறை

கண்ணை விழித்தான் ராஜு. ஒரே ஆச்சரியமாக இருந்தது. மீண்டும் இறுக மூடிக் கொண்டான்.



"எங்கே இருக்கிறேன்? இது என்ன குகை போல இருக்கிறது? கதைப் புத்தகத்தில் படித்து இருக்கிற பயங்கர அறை போல இருக்கிறதே! அந்த ரயில் வண்டி எல்லாம் எங்கே?" என்று திகைத்துப் போனான்.

அதுவொரு இருட்டறை. ராஜுவின் தலைக்கு மேலே சுவரில் 'மினுக்' 'மினுக்' கென்று மங்கலான விளக்கு ஒன்று எரிந்து கொண்டிருந்தது.

ஒரே இருட்டு. அவனுக்குச் சற்றுத் தள்ளிச் சிலர் கறுப்பு முகமூடி அணிந்து முணுமுணு வென்று பேசியது மட்டும் ராஜுவுக்குக் கேட்டது. ஆனால் பாஷை புரியவில்லை. "அரக்கோணத்தில் இறங்க வேண்டிய நான் இவர்களிடம் எப்படி அகப்பட்டுக் கொண்டேன்? இவர்களைப் பார்த்தால் கொள்ளைக் கூட்டத்தினர் போல இருக்கிறதே" என்று நினைத்து அல்லாடினான் சிறுவன் ராஜு.

வேளை தவறாமல் சாப்பாடு வந்தது. ஆனால் தன்னை எதற்காக இங்கே கொண்டு வந்து அடைத்துப் போட்டிருக்கிறார்கள் என்று மட்டும் அவனுக்குப் புரியவில்லை. யாரையாவது கேட்டால், 'உஷ்!' என்று வாயில் விரலை வைத்து மடக்கி விடுகிறார்கள். பாவம்! ராஜுவுக்குப் போலீஸ்காரனுக்குப் பயந்து என்னத்துக்கு இந்தத் திருட்டுக் கோஷ்டியினரிடம் சிக்கிக் கொண்டோம் என்று அழுகை அழுகையாக வந்தது. (தொடரும்)

# ஆந்தையின் தந்திரம்



ஒரு நாள் காட்டில் பயங்கரமாகக் காற்று அடித்தது. 'மளார், மளார்' என்று பெரிய பெரிய மரங்களெல்லாம் முறிந்து கீழே சாய்ந்தன. அந்தப் பழைய வேப்ப மரம் சாய்ந்து விடும் என்று ஆந்தை நினைக்கவேயில்லை. ஆந்தை எத்தனையோ வருஷங்களாக அந்த மரத்தில் இருந்த பெரிய பொந்தில் தன் குஞ்சுகளுடன் வசித்து வந்தது.

மரப் பொந்தில் ஆந்தையின் குஞ்சுகள் பத்திரமாகவே இருந்தன. அன்று இராத்திரிப் பொழுதை அங்கேயே கழித்துவிட்டால் மறுநாள் எங்கேயாவது ஒரு பத்திரமான இடத்துக்குப் போய் விடலாம் என்று ஆந்தை நினைத்தது. சாய்ந்து கிடந்த மரத்தில் ஏதோ சலசலப்புச் சத்தம் கேட்கவே, திகிலுடன் சுற்று முற்றும் பார்த்தது; ஆந்தைக் குஞ்சுகளை மோப்பம் பிடித்துக்கொண்டு ஒரு நரி ஓடி வருவது தெரிந்தது. எப்படியாவது அதைத் துரத்தத் தீர்மானித்தது, ஆந்தை.

"நரியாரே, நரியாரே! உம்மால் இன்னும் கொஞ்சம் வேகமாக ஓட முடியுமா?" என்று கேட்டது.

"ஏன்? நான் எதற்காக இன்னும் வேகமாக ஓட வேண்டும்?"

ஆந்தை பரபரப்புடன், "அடாடா, நீர் கூட தேயும், உம்மை ஒன்று தொடர்ந்து கொண்டே வருகிறது! ஓடும், ஓடும்! வேகமாக ஓடும்!" என்று சொல்லிக்கொண்டே பறந்தது.

நரி தானும் கால் பாய்ச்சலில் பின்னால் திரும்பிப் பாராமல் ஓடியது. ரொம்ப தூரம் வேகமாக ஓடியதால் நரிக்கு மூச்சு இரைக்கத் தொடங்கியது.

"ஆந்தையே, அது இன்னும் தொடர்ந்து வருகிறதா?" என்று பரிதாபக் குரலில் நரி மூச்சு வாங்கக் கேட்டது.

"ஆகா, இன்னும் அது உம்மைத் தொடர்ந்து வருகிறது!" என்றது ஆந்தை.

களைப்பும் ஆத்திரமும் தாங்க முடியாமல் நரி, "ஆந்தையே, அது என்ன என்றுதான் நன்றாய்ப் பார்த்துச் சொல்லேன்!" என்றது.

இதற்குள் பொழுது விடிய ஆரம்பித்து விடவே, ஆந்தையின் பயம் நீங்கியது.

"நரியாரே, உம்மைத் தொடர்ந்து வருவது வேறொன்றுமில்லை. உம்முடைய வால்தான். திரும்பிப் பாரும், அது வருகிறதா இல்லையா என்று!"

ஆந்தை சொன்னதைக் கேட்டதும் நரிக்கு வந்த கோபம் கொஞ்ச நஞ்சமில்லை. ஆனால் அதுதான் ஓடின அலுப்புத் தாங்காமல் கீழே படுத்து விட்டதே! அந்த அலுப்புத் தீர இரண்டு நாளாவது ஆகுமே! ஆந்தை ஆனந்தமாக தன் மரப் பொந்துக்கு வந்து சேர்ந்தது. —விஜயம்



# இன்ப வாழ்க்கை

சுமதி

அன்று பரீக்ஷை முடிவுகள் வெளி வந்தன. அதில் என் எண்ணைக் காணவில்லை; பயந்தபடி ஆகி விட்டது. நான் தேறவில்லை.

எனக்கும் கணக்குக்கும் அவ்வளவாகப் பொருத்தமில்லை. இது தெரிந்து கொண்டு தானோ என்னவோ அந்த வருஷம் கணக்குப் பரீக்ஷையை மிகக் கடினமாக்கி விட்டனர். இதற்குள் உள்ளேயிருந்து வந்து கொண்டே, "என்னடி, ராதை! பேப்பர் வந்து விட்டதா! பாஸாகி விட்டதா!" என்று ஆவலுடன் கேட்டாள் என் தாயார்.

நாலைந்து பெண்களைப் பெற்ற ஒரு தாயாருக்கு, எப்படியாவது தன் பெண்கள் எஸ். எஸ். எல். ஸி. பரீக்ஷை தேறி விட்டால் எளிதாக வரன் கிடைத்து விடுமே என்ற எண்ணம் தோன்றுவது இயற்கைதானே! இந்தக் காலத்தில்தான் பெண் பார்க்க வந்தால், பெண் படித்திருக்கிறாளா, பாடத்தெரியுமா, ஆடத் தெரியுமா, ஹிந்தி வருமா என்றெல்லாம் கேட்கிறார்களே! ஏதோ இது மாதிரி பரீக்ஷைகளிலாவது தேறியிருந்தால் எதிர் ஜாமீன் இல்லாமல் கல்யாணம் செய்து விடலாமே என்ற ஆசை அவளுக்கு. அந்த ஆசையை நிறைவேற்றாமல் இருக்கும் நான் அவள் கேள்விக்கு எப்படிப் பதில் சொல்லுவது!

"என்னடி, விழிக்கிறாய்!" இந்தக் கேள்வியில் தொனித்த ஏமாற்றம் என்னை வாள் கொண்டு வெட்டுவது போலிருந்தது.

அன்றைய தினத்திலிருந்து நான் அனுபவித்ததை நரக வேதனை என்று சொன்னாலும் பொருந்தாது. எதற்கெடுத்தாலும், நான் பரீக்ஷையில் தேறாத விஷயந்தான் வரும்.

ஒரு நாள் வீட்டில் அதிகமாயிருந்தது காரியம். அவசரத்தில், பாத்திரம் கை நழுவிக் கீழே விழுந்து விட்டது. சாதாரண நாட்களாயிருந்தால் அதை யாரும் பொருட்படுத்தியிருக்க மாட்டார்கள். ஆனால் அன்று வெளியே போயிருந்த என் தாயார், சமையலறைக்கு வந்து, எரிக்கும் விழிகளுடன் என்னைப் பார்த்த பார்வை...... அப்பப்ப...இப்பொழுது நினைத்தாலும் நடுங்குகிறது உடல்.

"தேகத்தில் துளிக்கூடப் பயமில்லை. அவ்வளவு என்ன அலக்ஷியம்! நாளைக்கு ஒருத்தன் வீட்டிலே போய்க் குடித்தனம் எப்படியடி செய்வே! நீ செய்யற அழகைப் பார்த்து, 'பெண்ணை வளர்த்திருக்கிறதைப் பார்!' என்று என்னை யல்லவா பரிகாசம் செய்வார்கள்! ஒண்ணு படிப்பாவது இருக்கணும்; இல்லே காரியத்திலாவது, பம்பரமாக யிருக்கணும். அதுவும் இல்லே; இதுவும் இல்லே........."

இங்கு ஒரு வார்த்தை நான் அவசியம் சொல்ல வேண்டும். என் தாயார் ஒன்றும் அவ்வளவு கொடுமையானவளல்ல. அவள் எங்களை யெல்லாம்—அதிலும் என்னை—பாலுக்குப் பதில் அன்பைப் புகட்டித்தான் வளர்த்தாள் என்றால் மிகையாகாது. குழந்தையிலே யிருந்து வியாதி படுத்திக் கொண்டிருந்த என்னைக் கண்ணின் மணியாகவே வளர்த்தாள். சிற்சில சமயங்களில் என் சகோதரிகள் கூட என்னைக் கண்டு பொறாமைப்படுவார்கள்! நான் நல்ல இடத்தில் வாழ்க்கைப் பட்டுச் சுகமாக இருக்க விரும்பினாள் அம்மா. அப்படி 'நல்ல' இடம் கிடைப்பதற்கு இடையூறாக நான் பரீக்ஷையில் தேறாத குற்றத்தை அவளால் மன்னிக்க முடியவில்லை; அவள் என்ன செய்வாள்!

பின் பொறுப்பாளி யார்? 'அவன்' தான் என்று முடிவு கட்டியது என்னுள்ளம். 'வரப்போகும் அவனு'க்காகத்தானே இப்படி எல்லாம் ஏசுகிறாள் என் தாயார்!

அன்று மத்தியானம் சாப்பாடு ஆன பின்பு ஏதோ பத்திரிகை யொன்றைப் படித்துக் கொண்டிருந்தேன். அந்தப் பக்கமாகச் சென்று கொண்டிருந்த என் தாயார் என்னை வெறித்துப் பார்த்துவிட்டு, "ஆமாம், கதை படி, நாவல்படி, உருப்பட்டு விடலாம். பொழுது இருந்தால் சற்று நேரம் ஹிந்தி புத்தகத்தைப் படிக்கிறதுதானே! நாளைக்கு ஒருத்தனைக் கட்டிக் கொண்டால் வடக்கே எங்கேயோ போய்த்தானே குடித்தனம் செய்ய நேரும்!" என்று ஒரு படலம் வாசிக்கத் தொடங்கி விட்டாள். நல்ல வேளையாக இந்தப் பக்கத்தை விட்டுக் கண்காணாமல் போக நேரிடலாம் என்று நினைத்ததும் திருப்தி ஏற்பட்டது. ஆனால் ஹிந்தி படிக்க வேண்டும் என்று நினைத்ததும் எல்லையில்லாத ஆத்திரமுண்டாயிற்று. ஹிந்தி படித்துத்தானா கற்றுக் கொள்ள வேண்டும்! நாலு மாதம் வடக்கே போயிருந்தால் எல்லாம் தானாக வருகிறது. எதிர் வீட்டுப் பத்மாவைப் பூனாவில் கொடுத்தார்கள். ஒரு வருஷங்கூட ஆகவில்லை; திரும்பி வந்திருக்கிறாள் பிரசவத்திற்கு. ஆனால் அவள் மராத்தி பாஷையில் தங்கு தடையின்றி எப்படிப் பேசுகிறாள்! அவள் என்ன பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படித்தாளா!

சிற்சில சமயம் தனியே உட்கார்ந்துகொண்டு குருட்டு யோசனை செய்து கொண்டிருப்பேன். அப்பொழுதெல்லாம் வரும் காட்சிகளைப் பற்றிய எண்ணத்தில் கட்டவிழ்ந்த காளைபோல ஓடும் என் மனம். ஆனால் அவ்வெண்ணத்தின் அடியிலே நிழல்போலத் தெரியும், சரிவரத் தெரியாத 'அவன்' உருவம். உடனே 'அவன்' மீது அடக்க முடியாத கோபம் உண்டாகும். அவனுக்காக நான் படும் தொல்லைகளை நினைக்க நினைக்க அவனைப் பழிவாங்க வேண்டும் என்ற எண்ணமும் தோன்றும்.

என் தந்தை எனக்கு மணம் முடிக்கும் முயற்சியைத் தொடங்கினார். ஒன்றல்ல, நூறு ஜாதகங்கள் கொண்டு வருவார். அவருக்கு ஜாதகத்தில் அபார நம்பிக்கை. என் அதிர்ஷ்டம், ஒரு ஜாதகமும் பொருந்தவில்லை. என் தகப்பனாரின் உத்தியோகம் அவரை எங்கள் கூட ஒரு பத்து நாள் சேர்ந்தாற் போலிருக்கச்

செய்யாது. மாதத்தில் இருபத்தைந்து நாள் வெளியூர் போய் வந்தால், அவர் சென்றிருந்த ஊர்களில் கிடைக்கும் விசேஷ சாமான்களை யெல்லாம் வாங்கிக்கொண்டு வருவார். அத்துடன் ஒரு கட்டு ஜாதகமும் வரும். வீட்டிலிருக்கும் சில தினங்களில் ஜாதகங்களை ஜோதிடரிடம் காட்டிப் பரிசீலனை செய்வார்.

இப்படி வந்த ஜாதகக் குவியல்களில் இரண்டு மூன்றுதான் பொருந்தி யிருந்தன. ஒரு 'ஜாதகன்' படித்த பெண்ணாக இருக்க வேண்டும், அழகாக இருக்கவேண்டும் என்றெல்லாம் சொன்னான். என்னைப் பார்க்கவும் வந்தான். கண்ணுக்குச் சுமாராக யிருந்தான். வெற்றிலைக் காவி தோய்ந்த அவன் வாயையும் அசட்டுப் பார்வையும் எனக்குப் பிடிக்கவில்லை. இந்த அழகில் எனக்குக் குறுநி சயங்களை வகுத்த அவன் "மெட்ரிகுலேஷன்" பரீக்ஷையை முற்றுகையிட்டுவிட்டு வெற்றி கிட்டாமல் ஏதோ உத்தியோகத்தில் சேர்ந்தானும், யுத்த காலத்தில். அவனை எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. என் முடிவை ஆமோதித்தனர் என் பெற்றோர்கள்.

அடுத்து வந்த வரன்தான் சற்று விசேஷம். நல்ல சொத்துடைய மாமனுக்கு வாரிசு. பையன் பி. ஏ. பட்டம் பெற்று மாமன் வீட்டில் நிலபுலன்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். "அழகாகப் பாடும், அழகி" வேண்டும் என்பது அவனுடைய அபிலாஷை. நானும் வாய்ப்பாட்டும் பிடிலும் கற்றிருந்தேன்; 'ரதி' என்று என்னைச் சொல்லிக் கொள்ளாவிட்டாலும் போதுமான அழகுள்ளவள் நான் என்பது ஊரார் தீர்ப்பு. ஆகவே பெண் பார்க்கும் வைபவம் ஏற்பாடாயிற்று. ஏற்கனவே, 'வரப்போகும் அவனி'டம் துவேஷம் கொண்டிருந்த என் மனம், பெண் அப்படி யிருக்க வேண்டும், இப்படி யிருக்கவேண்டும் என்று நிர்ணயிக்கும் இந்த வரனைக் கேள்விப் பட்ட உடனேயே ஆத்திரம் வந்தது. இந்த அழகில் பெண் பார்க்க வருகிறார்கள் என்று வெகுவாக ஏற்பாடுகள் நடந்தன. என்னை அழகு செய்துகொண்டு அவர்கள் எதிரில் போய் 'நானழகா, உங்களுக்குப் பிடித்திருக்கிறதா' என்று கேட்கும் பாவனையில் நின்று, 'எனக்குப் பாடத் தெரியும்' என்று பாடிக் காட்டினேன். ஐயோ !......இதை யெல்லாம் நினைத்தால் கூடப் பற்றிக் கொண்டு வருகிறது.

என்னவோ என் தாய் தகப்பனுக்குக் கட்டுப்பட்டு அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமை என்று எண்ணியே, நான் இந்தச் சடங்குகளுக்கு உடன்பட்டேன். கடைசியில் இந்த வரனும் முடியவில்லை. காரணம் நான் அழகாக இல்லையாம்! என் தகப்பனுக்குச் சற்று வருத்தம். ஐயோ, இப்படிப்பட்ட நல்ல வரன் கை நழுவி விட்டதே என்ற ஆதுரம் என் தாய்க்கு. எனக்கோ பரம திருப்தி. அந்த முருகனை வாயார வாழ்த்தினேன். என்னழகைக் குறை சொன்ன அவன் கன்னங்கரேலென்று அழகு மண் சிறிதும் கலக்காமல் உண்டான பிரும்மாவின் சிருஷ்டி! ஆனால் ஆண் பிள்ளைக்கு அழகு எதற்கு என்பது மற்றையோர் வாதம்!

இந்தச் சம்பவங்களினால் 'வரப்போகும் அவ'னிடம் நான் கொண்டிருந்த கோபமும் பழி வாங்கும் எண்ணமும் உறுதிப்பட்டன. ஆனால் வீட்டிலோ என்பாடு மிகவும் கஷ்டமாகி விட்டது. 'தூக்கிரி அதிர்ஷ்டம்; ஒன்றும் சரியாக ஏற்பட மாட்டேனென்கிறது' என்று ஏசத் தொடங்கி விட்டார்கள்.

கல்யாண மாதங்கள் ஓடிக் கொண்டிருந்தன. என் பெற்றோருக்குத் தூக்கமே கிடையாது. சல்லடை போட்டுச் சலித்தும் தக்க வரன் கிடைக்க வில்லையே என்ற ஏக்கம். இந்த நிலையில் தெய்வத்திற்கும் பிரார்த்தனை வேறு கணக்கில்லாமல் செய்துகொண்டார்கள். எனக்குத் தீவிர நியம நிஷ்டைகள் வகுத்தார்கள். வியாழக்கிழமை, ஞாயிற்றுக் கிழமை, இருத்திகை, சோமவாரம் என்றெல்லாம் பட்டினி யிருந்து பூஜை செய்தேன். இந்த ரேஷன் நாட்களில் 'வாரத்தில் ஒரு நாள் சாப்பாட்டைத் தவிர்' என்று அரசாங்கத்தார் போடும் கூச்சலுக்கு யாராவது செவி சாய்த்தார்



களோ என்னமோ எனக்குத் தெரியாது. ஆனால் நான் வாரத்தில் குறைந்தது மூன்று நாட்கள் ஒரு வேளைச் சாப்பாட்டுடன் சரி. சில நாட்களில் சுத்தப் பட்டினி. இதன் விளைவாக என் தேகம் மெலிந்தது; எனக்குத் தூக்கம் பிரிட்டுக் கொண்டு வந்தது. நான் படும் அவஸ்தையை நினைத்துத் தனிமையில் கண்ணீர் உகுப்பேன். ஆனால் என்ன செய்வது! கல்யாணம் ஆனாலொழிய இவற்றினின்றும் விடுதலை கிடையாது என்பது உறுதி. நாட்களைக் கடத்தினேன். 'வரப்போகும் அவனிடம்' கோபம் மிஞ்சி, அவனை வெறுக்கத் தலைப்பட்டேன்; மனமாரச் சபித்தேன்.

★

கடைசியில் தான் அவருடைய ஜாதகம் வந்தது. இன்று என் வாழ்க்கையை அமுத மயமாக்கும் 'அவர்' என் வாழ்க்கையில் புகுந்தார். ஆனால் அன்று அவரை எவ்வளவு வெறுப்புடன் அடைந்தேன் என்பதை இப்பொழுது நினைத்தால் கூட என் உள்ளம் நடுங்குகிறது!



ஜாதகம் வெகு நன்றாகப் பொருந்தியிருக்கிறது என்று ஜோசியர் சொன்னதும் என் தகப்பனாருக்கு மிக்க சந்தோஷம். எப்படியாவது இந்த வரனை முடித்து விடவேண்டும் என்று நிர்மானித்து ஏற்பாடும் செய்யத் தொடங்கினார். அவர் அப்பொழுது டில்லியில் உத்யோகத்திலிருந்தார்; பி. ஏ. பட்டம் பெற்றவர்; வீட்டுக்கு ஒரே புதல்வர். பெண் பார்க்கத் தாம் வரவில்லை என்றும், தம் வீட்டார் பார்த்துச் சம்மதப்பட்டால் போதும் என்றும் அவர் எழுதியிருந்தார். ஆனால் என் தகப்பனாருக்குச் சம்மதமில்லை; கடைசியில் ஏதாவது ஆகிவிட்டால் என்ன செய்வது என்ற பயம். அவரை வரும்படி வற்புறுத்தி எழுதினார்.

அன்று தான் பெண் பார்க்கும் வைபவம்; எனக்குத் துளிக்கூடப் பிடிக்கவில்லை! இருந்தாலும் பெற்றோர் ஆட்டியபடி ஆடத்தானே வேண்டும்! அவர் டில்லியிலிருந்து நேராக வந்தார்; தம் நண்பர் வீட்டில் தங்கியிருந்து விட்டு, அன்று காலை ஒன்பது மணிக்கு என்னைப் பார்க்க வருவதாக ஏற்பாடு. அதற்குள் அவருடைய உறவினர் சிலர் கிராமத்திலிருந்து நேராக எங்கள் வீட்டிற்கு வந்தனர். அவர்கள் சுத்த கிராமம்! பட்டிக்காடு! என்னை வெறிக்க வெறிக்கப் பார்த்தனர். அவர்களுடைய குடும்பத்தில் என்னையும் ஒருத்தியாக் கொள்ள அவர்கள் செய்த பரிசீலனையைப் பார்த்தபோது, எனக்கு ஆத்திரம் தாங்கவில்லை. கடைசியில் அவர் வந்தார். சாதாரணமாக வேஷ்டி, சட்டை மணிந்து, ஆடம்பரமின்றி அடக்கமாக வந்து உட்கார்ந்தார். முறைப்படி நடக்க வேண்டியதெல்லாம் நடந்தன. அவரோ குனிந்த தலை நிமிரவில்லை. அதைப் பார்க்க எனக்கே சற்றுச் சிரிப்பாக இருந்தது.

சற்று நேரம் கழித்து, அவர் என்னுடன் தனித்துப் பேச விரும்புவதாகத் தெரிந்ததும், எனக்குத் தூக்கி வாரிப்போட்டது! அதுவரை வயதுவந்த ஒருவரிடமும் நான் பேசிப் பழகவில்லை. ஆகவே என்னுடல் நடுங்கியது. மெள்ள மாடிக்குச் சென்றேன். அவர் ஜன்னல் மீது சாய்ந்து கொண்டிருந்தார். என்னைக் கண்டதும் "வாம்மா, ராதை!" என்றார். அவர் குரல் மிகவும் இனிமையாக இருந்தது. நிமிர்ந்து பார்த்தேன். அவர் சற்று கறுப்புதான்; எனினும் குறுகுறுப்பான பார்வை; ஒளிவிசும் முகம்.

"ராதை, உனக்கு என்னைக் கல்யாணம் செய்து கொள்ளுவதில் இஷ்டமா?"

என்ன பதில் சொல்லுவது என்று புரியவில்லை. தலையை ஆட்டினேன்.

"எனக்கு இந்தச் சைகை எல்லாம் புரியாது. மேலும், உன்னை நான் வார்த்தையாலேதானே கேட்டேன்! சைகையிலா கேட்டேன்!"

என்ன குறும்பு, என்ன பரிகாசம்! எனக்கு ஆத்திரமும் அழுகையுமாக வந்தது. ஆனால் அப்பொழுது என் மனக் கண்முன் தோன்றியவை ஏக்கமுற்ற என் பெற்றோரின் காட்சி, அதை அடுத்து நான் படும் தொல்லைகள்......

ஆகவே, "இஷ்டந்தான்"—என்று எப்படியோ சொல்லி முடித்து விட்டேன். அதைத் தொடர்ந்து நானும் ஏன் அவரை அதே கேள்வியைக் கேட்கக் கூடாது என்ற எண்ணம் தலை யெடுக்கவே, "உங்களுக்கு?" என்றேன்.

"மூன்றாம் வகுப்புப் பிரயாணத்தின் அவதிகளை யெல்லாம் பொறுத்துக் கொண்டு, ஆயிரத்து முந்நூற்று அறுபது மைல்கள் வந்திருப்பதிலிருந்தே தெரியவில்லையா எனக்கு இஷ்டமிருப்பதும், இல்லாததும்!"

மீண்டும் குறும்புத்தனமான பதில் எனக்குப் பிடித்திருந்தது. கதையை வளர்த்துவானேன். அடுத்த முகூர்த்தத்தில் நானும் அவரும் சதிபதிகளாகி விட்டோம்.

எங்கள் தனிக் குடித்தன வாழ்க்கை டில்லியில் ஆரம்பித்தது. தனி வாழ்க்கைத் தொடங்கியதும் என் மனத்தில் புதைந்து கிடந்த எண்ணங்கள் மெள்ள வெளிவரத் தொடங்கின. இன்று நினைத்தாலும் எனக்கே வெட்கமாக இருக்கிறது! அப்படியும் ஒருநாள் நான் இருந்தேனா என்று நினைக்க எனக்கே அருவருப்பா யிருக்கிறது.

என் மனத்தில் ஆழப் பதிந்திருந்த வெறுப்பும் பழிவாங்கும் எண்ணமும் தலை விரித்தாடத் தொடங்கின. எப்பொழுது பார்த்தாலும் சிடுசிடு வென்றிருப்பேன். எதற்கெடுத்தாலும் வெடுக்கென்று அவரிடம் பதில் சொல்லுவேன். அவருடைய பரிவையும் அன்பையும் உதாசினம் செய்வேன். எனக்கு அப்பொழுதிருந்த மனப்பான்மையில் அவரிடம் காரணமில்லாத அலக்ஷியம். ஆனால் அவர்—பாவம்—அதைச் சிறிதுகூடப் பொருட்படுத்தவில்லை. காரியாலயம் போய் வருவார்; கடைத்தெரு சென்று சாமான்களை வாங்கி வருவார்; சாப்பாடு ஆனதும் படிக்க உட்கார்ந்து விடுவார். அவர் இலாகாவில் உத்தியோக உயர்வுக்காக நடக்க இருந்த ஒரு பரீக்ஷைக்கு அவர் படித்து வந்தார். இரவு வெகு நேரம் படிப்பார். காலை நான்கு மணிக்கெல்லாம் விழித்துக் கொண்டு படிக்கத் தொடங்குவார். இதைக் கண்ட எனக்குச் சிற்சில சமயங்களில் பரிதாபமா யிருக்கும். இவரிடம் அன்பொழுகப் பேசி, அவர் மனம் இன்புறச் செய்யாமலிருக்கிறோமே என்ற பெண்மையின் இயல்பான நினைவுகள் தலை யெடுக்கும். ஆனால் என் பேயெண்ணம் அதை அடக்கிவிடும்.

குளிர்காலம் தொடங்கியது. பல் கிட்டும் குளிர். என்னால் கீழே அடி எடுத்து வைத்து நடமாட முடியவில்லை. எப்பொழுதும் கம்பளிக்குள்ளேயே இருக்கவேண்டும் போலிருக்கும். ஆனால் அவரோ, வழக்கம்போல் நான்கு மணிக்கு எழுந்து வெந்நீர் போட்டு, பால் வாங்கி, காப்பி தயாரித்து, சமையல் செய்ய அடுப்பையும் மூட்டி விடுவார். இதற்கிடையில் புத்தகத்துடன் மன்றாடுவார். ஏழு மணியாகியும் நான் எழுந்திருக்கா விட்டால், "சாதை, எழுந்திரு. காப்பி ஆறிப் போகிறதே" என்பார் பரிவுடன். அந்த வார்த்தையை மீண்டும் அவர் சொல்லிக் கேட்க விரும்பும் என் பெண்மை. தனக்குக் காரியாலயம் போக வேண்டுமே, சீக்கிரம் சமையலாக வேண்டும் என்ற அக்கறையில்லை; 'காப்பி ஆறிப் போகிறதே' என்றுதான் சொல்லுவார். ஆனால் இந்தப் பேய் உள்ளம் அன்பு நிறைக்கும் அந்த வார்த்தையை அன்று ஏற்கவில்லை!

எனக்குச் சாப்பாடு விஷயத்தில் ஆயிரம் விருப்பு வெறுப்புகள். அது பிடிக்காது, இது பிடிக்காது என்று ஒதுக்கிவிடுவேன். அது மட்டுமல்ல; பால் பிடிக்காது, பழம் பிடிக்காது என்று கூட உண்டு! அவர் இதையெல்லாம் தெரிந்து கொண்டிருந்தார். காய்கறி வாங்கி வந்தால், எல்லாம் எனக்குப் பிடித்ததாகவே இருக்கும். அவருக்கு 'தக்காளி' என்றால் உயிர்; எனக்கு அது விஷம்! ஆகவே ஒருநாள்கூட அதை வாங்கி வந்ததில்லை.

ஒருநாள் வாசலில் காய்கறி விற்பவனிடம் 'தக்காளி' வாங்கிச் சமைத்திருந்தேன். அதைச் சாப்பிட்டதும் என்னை நிமிர்ந்து பார்த்தார்.

"ஏன் இதை வாங்கினாய்!" என்றார்.

"உங்களுக்குப் பிடிக்குமே என்றுதான்."

"எனக்குப் பிடித்தால் போதுமா? நாமிருவரும் சேர்ந்துதானே குடித்தனம் பண்ணுகிறோம். ஒருவர் இஷ்டத்திற்காகச் செய்வது என்பது கூடாது. இரண்டு பேருக்கும் பிடித்த படிச் செய்வதுதான் சரி" என்று சொன்னது, என் பேய் மனத்தைச் சவுக்குக் கொண்டு அடிப்பது போலிருந்தது இந்த வார்த்தை. ஆனால் என் பெண்மை எக்களித்தது.

ஜனவரி இருபத்தாறாந் தேதி குடியரசு விழா டில்லியில் அமர்க்களப்பட்டது. என்னை வற்புறுத்தி வேடிக்கை பார்க்க அனுப்பினார். நானும் என் சிநேகிதிகள் கூடச் சென்றேன்.



பிரயாணி:—என்ன தொண, தொணப்பு, ஐயா? காசியை விட்டுக் கிளம்பின நாழியாக, ரயில் எப்போது போய்ச் சேரும், என்று சுமார் ஆயிரம் தடவை கேட்டுவிட்டீரே, எதற்காக அப்படி அவசரப்படுகிறீர்கள்?

சாஸ்திரிகள்:— இந்த கங்கைச் சொம்பு ஓட்டையாகப் போய் விட்டது. சீக்கிரமாக வீடு போய்ச் சேரணுமே என்றுதான்!

திரும்பி வீட்டிற்கு வர வெகு நேரமாகி விட்டது. அவசர அவசரமாக, சமையல்செய்ய, சமையலறைக்குள் நுழைந்ததும் ஒரே திகைப் பாயிருந்தது. இரவு சாப்பாடு தயார்! எனக்கு அவமானமாகப் போய்விட்டது.

காலுக்கு நான் என்னை அறியாமலேயே அவரிடம் அநுதாபம் உண்டாயிற்று. எவ் வளவுக் கெவ்வளவு அவரை மதிக்காமல் அலட் சியம் செய்ய முற்பட்டேனோ அவ்வளவுக் கவ் வளவு என் பேய் மனம் படுதோல்வியுற்றது. அவரது அன்பை விரும்பயது என் பெண்மை.

அன்று பாட்டுக் கச்சேரி. அவருக்குப் பாட்டு என்றால் பைத்தியம்: எனக்கும் பிடிக்கும். பரீக்ஷைக்குப் படிப்பதில் மூழ்கி யிருந்த அவர் என்னை மட்டும் கச்சேரிக்கு அனுப்பினார். மாலை மூன்று மணிக்குப் புறப் பட்ட நான் திரும்பி வரும்பொழுது இரவு பத்து மணியாகி விட்டது. அவர் படித்துக் கொண்டிருந்தார். எனக்குப் பசி தாங்கவில்லை. சாப்பிட உட்கார்ந்தேன். அவர் சாப்பிட்டிருப் பார் என்ற எண்ணம் எனக்கு. ஆனால் சமை யல் செய்து வைத்திருந்தவை எல்லாம் அப் படியே இருந்தன.

"இன்னும் நீங்கள் சாப்பிடவில்லையா! உங்களுக்குப் பசிக்கவில்லையா!" என்றேன் பரபரப்புடன்.

"இப்போதுதான் பசிக்கிறது. நீயும் பசியோடு வருவாயே, சேர்ந்தாற் போல் சாப்பிடலாம் என்றிருந்தேன்."

என்னுடல் வியர்த்தது. எனக்காகப் பசி யுடன் உட்கார்ந்திருந்தார் என்ற நினைவு என்னைக் கலக்கி விட்டது. அவரது அன்பின் ஆழத்தைக் கண்டது என் உள்ளம். அவ ருடன் சேர்ந்து உட்கார்ந்து சாப்பிட்ட உணவு அன்று அமிர்தமாயிருந்தது!

இந்த நிலையில் நான் கருவுற்றிருந்தேன். மசக்கை அவதிகள் என்னைப் பாடாய்ப் படுத் தின. முன்பெல்லாம் அவரை வெறுத்து வந்த என் பேயுள்ளம் இன்று அவருடைய அன்புப் பிச்சைக்குக் காத்துக் கிடந்தது என் பெண் மனம். அவர் பரீக்ஷைக்கு இரவு பகலாக உழைத்து வந்தார். அவரை நெருங்கவே எனக்குப் பயமாயிருந்தது. வழக்கம் போல் காலையில் சீக்கிரம் எழுந்து காப்பி போட்டு விட்டுப் படிக்க உட்கார்ந்து விடுவார். எனக்கோ அடிக்கடி வாந்தி எடுத்துப் பிரா ணனை வாங்கும். அப்பொழுதெல்லாம் அவர் ஓடி வந்து என் தலையைப் பிடித்துக் கொண் டிருந்து, பிறகு என்னைப் படுக்கவைத்து விட்டு, கையில் புத்தகத்துடன் அடுப்படியில் உட்கார்ந்து காரியம் செய்வார். அப்பொழு தெல்லாம் என் மனத்தில் விவரிக்க முடியாத தோர் உணர்ச்சி உண்டாகும். அவருடைய அன்பை அறியாது அவரை வெறுத்த நாட்களை நினைத்துக் கொள்வேன். என் உடல் நடுங் கும். அப்படி மிருகத்தனமாக நான் நடந்து கொண்டிருந்த காலங்களில் கூட எவ்வளவு பரிவோடு என்னை நடத்தினார் என்று நினைக் கவே வெட்கமாயிருந்தது.

அவர் பரீக்ஷைக்குச் சில நாட்களே இருந் தன. என் அவஸ்தையோ அதிகமாயிருந்தது.



ஜானகி:—அம்மா, இன்றைக்குப் பள்ளிக்கூடத்தில் ஒரு பெண் வழுக்கி விழுந்துவிட்டாள். அதைப் பார்த்து எல்லாப் பெண்களும் கை தட்டிக் கேலி செய்தார்கள். நான் மட்டும் கேலி செய்யவில்லை!

தாயார் (சந்தோஷத்துடன்):—அப்படியா, கண்ணே! ஏன் நீ மட்டும் சிரிக்கவில்லை, சொல்லு!

ஜானகி:—நான்தானே அம்மா கீழே விழுந்தவள்!

ஒவ்வொரு நிமிஷத்தையும் உயர்வாகக் கருதிப் படித்து வந்தார். ஆகவே எனக்கு எப்படி ஒத்தாசை செய்ய முடியும்! "ராதை, இன்னும் பத்து நாள் தான். எப்படியோ நீ எல்லாக் காரியத்தையும் பார்த்துக் கொண்டு விடு. சாதம் வடித்து, ரசமோ, துவையலோ, அதிகச் சிரமமில்லாமல் செய்தால் போதும்" என்றார் ஒருநாள். அந்த வார்த்தையில் தோய்ந்திருந்த பரிவு என்னை இன்பக் கடலில் ஆழ்த்தியது. "அவர் சாதாரண மனிதரல்ல: தெய்வப் பிறவியோ!" என்று எண்ணி வியந்தது என் மனம்.

அன்று பரீக்ஷை முடிந்து வீட்டுக்கு வந்தார். அவர் வரவுக்காகக் காத்துக் கொண்டிருந் தேன். என் உள்ளத்தில் அன்புப் பெருக் கெடுத்துக் கொந்தளித்துக் கொண்டிருந்தது. "ராதை, பரீக்ஷை யெல்லாம் நன்றாக எழுதி யிருக்கிறேன். முருகன் அருள் இருந்தால் நிச்சயம் தேறிவிடுவேன்" என்று ஆர்வத் துடன் சொல்லிவிட்டு, "பாவம், இவ்வளவு நாளும் உன்னைக் கவனிக்கவேமுடியாமல் போய் விட்டது" என்று அன்பு ததும்பக் கூறினார்.

* * *

மாலதி பிறந்து நான்கு மாதங்களாகி விட்டன. இவ்வளவு நாள் வீட்டுப் பிரிந்து எப்படித்தா னிருந்தேனோ, நினைத்தாலே ஆச் சரியமாயிருக்கிறது. இன்று என் மனம் குதூகலத்தில் திளைத்துக் கொண்டிருக்கிறது. இன்னும் ஒரு மணி நேரத்தில் அவர் வந்து விடுவார். என் வாழ்க்கையில் புகுமுன் நான் கொண்டிருந்த வெறுப்பைத் தன் ஆழங் காணாத அன்பால் அகற்றி, இன்று என் வாழ்க் கையை இன்ப சாகரமாகச் செய்த என் தெய் வத்துடன் கூடி மகிழத் துடித்துக் கொண் டிருக்கிறது என் உள்ளம்.

# வள்ளியின் அதிர்ஷ்டம்

ஆர். சகுந்தலா

கண்டக்டர் கந்தசாமியை அவன் நண்பன் பஞ்சநதம் பத்து தடவைக்குமேல், டீ குடிக்கக் கூப்பிட்டும், அவன் இருந்த இடத்தை விட்டு அசையவில்லை. கடைசியில் பஞ்சநதம் அலுத்துப் போய்த் தான் மட்டும் டீ கடைக்குப் போனான்.

கந்தசாமி தலையை நிமிர்த்து பார்த்தான். அவனுடைய சகாக்கள் 'இளநீர், டீ, காப்பி, ஐஸ்கிரீம்' என்று மனத்துக்குப் பிடித்ததையெல்லாம் வாங்கி உட்கொண்டு பிற்பகல் 'டிபன்' வேளையை ஓட்டிக் கொண்டிருந்தனர். மற்ற நாட்களாக இருந்தால் அவனும் அவர்களோடு சேர்ந்து கொண்டு அரட்டை யடிப்பான். அவர்களெல்லோரையும் விட, 'டிபன்' வேளையை அதிகமாக அனுபவிப்பவன் அவன்தான். அன்று அதிகாலையில் வேலைக்கு வரும்போதே அவனுக்கு வழக்கமாக இருக்கும் உற்சாகம் இல்லை. 'டிக்கெட்ஸ்' என்று எப்போதும் கம்பீரமாக ஒலிக்கும் அவனுடைய குரலில் வழக்கமாக இருக்கும் துடிப்பும் ஜீவனும் இல்லை. சதா உற்சாகம் கரை புரளும் அவன் உள்ளத்தில் கவலையும் சோர்வும் குடி கொண்டிருந்தன.

நினைவு தெரிந்த நாள் முதல் அவனை வளர்த்து ஆளாக்கிய அவனுடைய அருமைத் தாய், அவனை விட்டுப் பிரிந்து போய் விட்டாள்! எத்தகைய பயங்கரமான உண்மை அது! அதை நினைக்க நினைக்க, வேதனை அதிகமாகி அவன் நெஞ்சை அரித்தது.

ரங்கம்மாள், அசாதாரணமான மனோ திடமும் நெஞ்சுத் துணிவும் படைத்தவள். இல்லாவிடில் சுற்றத்தாரின் பகையோடு, ரங்கவேலுவின் கைத்தலம் பற்றிய அவள் ஒரே வருஷ காலத்தில் கைம்பெண்ணாகிக் கதியற்று நின்ற காலத்தில் கூட எந்த உறவினருடைய உதவியையும் நாடாமல், தைரியமாகத் தன்னைத்தானே தேற்றிக் கொண்டு, தர்ம ஆஸ்பத்திரியில் பிறந்த தன் சிசுவையும் காப்பாற்றி முன்னுக்கு கொண்டு வந்திருக்க முடியுமா?

உலகில், தான் இழந்து நின்ற எல்லா இன்பங்களையும், உரிமைகளையும், 'தாய்மை' என்கிற அந்த ஒரு ஸ்தானத்தில், கண்டு களித்த பேதை அவள்! சென்ற வருஷம் ஒரு அழகான பெண்ணை அவனுக்குக் 'கட்டி வைத்தபின், தன் லட்சியக் கனவுகளெல்லாம் நிறைவேறி விட்டதாக எண்ணிப் பெருமித மடைந்தாள் ரங்கம்மா.

இவ்வாறு 'அவன் இன்பமே தன் இன்பம்' 'அவன் வாழ்வே தன் வாழ்வு' என்று அவனுக்காகவே வாழ்ந்து வந்த தியாகப் பிழம்பான தாயை முன்கோப குணத்தினால் கண நேரத்தில் இழந்து விட்டான் அவன்!

விஷயம் ஒன்றும் பிரமாதமானதில்லை! முதல் நாள் அவன் வேலை முடிந்து வீட்டுக்குத் திரும்பும் போது வெகு நேரமாகி விட்டது. தலைவலியும், களைப்பும், சோர்வும் அவனை வேற்று மனிதனாக்கி விட்டிருந்தது. 'புது மலரெ'னப் புன்னகை பூத்து வாசலில் வந்து நின்று வரவேற்கும் 'பெண் தெய்வம்'



அன்று கண்ணிலேயே காணப்படவில்லை. "வள்ளி" என்று களைப்புடன் அழைத்த அவன், சோர்வுமேலிடக் கயிற்றுக் கட்டிலில் சாய்ந்தான். ஆனால் பதில் இல்லை! அதற்குப் பதில் அடுக்களையிலிருந்து எழுந்த விம்மல் ஒலி மெல்ல அவன் காதுகளுக்கு எட்டியது. ஒரே எட்டில் அடுக்களைக்குள் நுழைந்தான் கந்தசாமி. முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு விம்மிக் கொண்டிருந்த வள்ளி கணவனைக் கண்டதும் திடுக்கிட்டு எழுந்து நின்றாள். சிவந்து இடுங்கியிருந்த அவள் கண்களும், கண்ணீர்க் கறைபடிந்த கன்னங்களும், அவள் நெடுநேரமாக அழுது கொண்டிருந்தாள் என்று அறிவித்தன. அதைக் கண்டு அவனது அன்பு மனம் அனுதாபத்தினால் பாகாய்க் கரைந்தது. விம்மல்களுக்கிடையே விஷயத்தை அவனுக்கு ஒரு மாதிரி அறிவித்தாள் வள்ளி.

மூன்றாவது வீட்டிலிருக்கும் மங்கம்மா, தனது சொந்தக்காரர் தறியில் போட்ட புடவைகளைத் தன் வீட்டில் கொண்டுவந்து வைத்துக் கொண்டு அவற்றை வியாபாரம் செய்து வந்தாள். அன்று மாலை, வள்ளி அவள் வீட்டுக்குச் சென்றிருந்தபோது, விதம் விதமான வர்ணங்களில் அழகழகான சேலைகளை அவளுக்குக் காட்டினாள் மங்கம்மா. அத்தனை புடவைகளுக்குள் ஒரே ஒரு புடவை வள்ளியின் கவனத்தை வெகுவாகக் கவர்ந்திருந்தது. கறுப்பு நிற உடல், 'பார்டரி'ல் நான்கு கொடிகளைப் போல் வெண்ணிறக் கோடுகள், அதனடியில் சின்னஞ் சிறு பச்சை மாங்காய்கள். அந்தப் புடவை மற்றெல்லாப் புடவைகளையும் விட மலிவாக இருந்தது. ஏழே ரூபாய்தான் அந்தப் புடவையின் விலை! கந்தசாமி சென்ற மாதத்தில் அவளிடம் கொடுத்து வைத்திருந்த பத்து ரூபாயிலிருந்து ஏழு ரூபாயை எடுத்துக் கொடுத்து, அந்தப் புடவையை வாங்கி வந்துவிட்டாள் வள்ளி. வீட்டுக்கு வந்ததும் தன் மாமியிடம் அந்தப் புடவையைக் காட்டினாள் வள்ளி. அவ்வளவுதான்! வந்துவிட்டது ரங்கம்மாளுக்கு ஆவேசம்!



"உன்னை யாரு அதிகப்பிரசங்கித்தனமா, புடவை எடுத்துவரச் சொன்னது? வீட்டிலே, பெரியவங்க, பெருந்தலைன்னு ஒரு மரியாதை கிடையாது!" என்று கூச்சலிட ஆரம்பித்து விட்டாள் அவள்.

அத்தனை வசை புராணங்களுக்குப் பின் வள்ளி அந்தப் புடவையை எடுத்துச் சென்று மங்கம்மாவிடமே கொடுத்துவிட்டு, ரூபாயை வாங்கி வந்துவிட்டாள்!

இந்தக் கதையைப் பொறுமையாகக் கேட்ட கந்தசாமி, "சரி போகட்டும்! நீ எழுந்து முகத்தைத் துடைத்துக்கொள்!" என்று உத்தரவிட்டான்.

"என் அப்பா, தம்பி! சாப்பிட நேரமாகவில்லையா? சாப்பிட்டுவிட்டு, பேசக்கனேன்!" என்று கனிவான குரலில் கேட்டபடியே, எங்கோ போயிருந்த ரங்கம்மாள் அப்போது உள்ளே நுழைந்தாள். அடியுண்ட நாகத்தைப் போல் சீறி எழுந்தான் கந்தசாமி. படபட வென்று வார்த்தைகளைப் பொரிந்து கொட்டிய தன் மகனின் கோபத்தைக் கண்டு பிரமித்துப் போய் நின்றாள் ரங்கம்மா!

வார்த்தைகள் முற்றின. களைப்பும், பசியும் கந்தசாமியை வெறியனாக்கி விட்டன. அத்து மீறிப் பேசிவிட்டான் அவன். தன் மனைவியை அதிகாரம் செய்வதாக இருந்தால் அவள் இனி அவ் வீட்டில் இருக்க முடியாதென்று கூறிவிட்டான். அவளுக்காக, ஆதி முதல் தான் பட்ட கஷ்டங்களை எண்ணிய ரங்கம்மாள் மனம் அவனது

தாக்ஷண்யமற்ற முரட்டுத்தனமான பேச்சைக் கேட்டுச் சுக்கு நூறாக உடைந்து விட்டது. வள்ளி—என்ன தான் இருந்தாலும் நேற்று வந்தவள்தானே? அவளுக்காகப் பரிந்து கொண்டு, பெற்ற தாயை வீட்டைவிட்டுப் போகச் சொல்லி உத்தர விட்டு விட்டான்! அவ்வளவுதான்! ரோஷம் பொத்துக் கொண்டு எழுந்தது அவள் உள்ளத்தில்! விடு விடுவென்று வீட்டை விட்டு இறங்கி நடந்து விட்டாள்!......

* * *

"பஸ் நம்பர் 173—கிளம்புங்க, 12-35 ஆகுது" என்ற 'டைம்'கீப்பரின் குரல், கந்தசாமியைத் தட்டியெழுப்பியது. ஏனெனில் அவனுடைய பஸ்ஸின் நம்பர்தான்—173. சற்று தூரத்தில் வயதான கிழவி ஒருத்தி பேசிக்கொண்டு நின்றிருந்தாள்.

"என்னமோ அப்போ கோபத்திலே கிளம்பி வந்துவிட்டேன். இப்போ என் மவனுக்கு ஜுரம்னு அங்கேயிருந்து வந்தவங்க சொன்னாங்க. மனசு கேட்கல்லே. வெய்யில் தாங்க முடியவில்லே. பஸ்ஸுக்கு ஒன்றரையணா இருந்தா கொடேம்மா. மகாராஜியா இருப்பே!"

"என்கிட்டே சில்லறை கிடையாது போ" என்று எரிந்து விழுந்தாள்' அந்த மகாராஜி! கந்தசாமி திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். வயதில், அவன் தாயைப் போன்றவள் தான் அந்தக் கிழவியும்! தும்பைப் பூவைப்போல் 'வெளே' ரென்று நரைத்துப் போன தலை முடியும், துவண்டு தோல் சுருங்கிப் போயிருந்த உடலும், அவளுடைய வயோதிகத்தைப் பற்றிக்கூற வக்காலத்து வாங்கியவைபோல் தோற்றமளித்தன. குழி விழுந்த அவளுடைய கண்களில் தேங்கியிருந்த ஏக்கம் அவன் உள்ளத்தைக் குலுக்கி எடுத்தது.

டிரைவர்கூடப் பஸ்ஸிலேறிக் கொண்டாகி விட்டது. வழக்கம்போல் பஸ் நிறைந்து விட்டிருந்தது. "கந்தசாமி!" என்றழைத்தான் டிரைவர்.

"இதோ வரேன் அண்ணே" என்று குரல் கொடுத்தபடியே பஸ்ஸில் ஏறினான் கந்தசாமி. அந்தக் கிழவி தான் நின்ற இடத்திலேயே நின்று கொண்டிருந்தாள். கையில் காசில்லாமல் பஸ்ஸில் எப்படி ஏறுவாள்? கந்தசாமியின் நினைவுகள் அவளையே சுற்றி வட்டமிட்டன. தன் தாயும் இப்படித்தான் எங்கேயாவது தவிக்கிறாளோ என்றெண்ணி அல்லலுற்றான் அவன்.

தன்னைப்போன்ற, கடமையிலிருந்து தவறிய ஒரு மகனால்தான் அவள் அக் கதிக்கு வந்திருக்கிறாள்!

"பாட்டி! வா சீக்கிரம், ஏறிக்கோ, வண்டி கிளம்பி விடும்" என்று அவசரப்படுத்தினான், கந்தசாமி. கிழவி எதிர்பாராத இந்த அழைப்பினால் அயர்ந்துபோய் நின்று விட்டாள். கந்தசாமி மறுபடியும் வற்புறுத்திக் கூறி அவளை வண்டியில் ஏற்றிக் கொண்டான். அதோடு நில்லாமல் தான் உட்காரும் ஆசனத்தைக் காட்டி அவளை உட்காரச் செய்தான். பஸ்ஸிலிருந்த பிரயாணிகள் கிழவி கந்தசாமிக்கு ஏதோ வேண்டியவள் என்று நினைத்துக் கொண்டனர். "இந்தா பாட்டி! நீ எங்கே போகணும்?" என்று பரிவோடு கேட்டான் கந்தசாமி.

"தேனாம்பேட்டைக்கு" என்று நடுங்கின குரலில் தெரிவித்தாள் கிழவி. அடுத்த நிமிஷம் 'தான் பணம் கொடுக்க முடியாத காரணத்திற்காக கீழே இறங்கி விடப்போகிறோம்' என்று எண்ண மிட்டது அவள் மனம். கந்தசாமி தன் ஜேபியிலிருந்து ஒன்றரையணா எடுத்துப் பணப்பையில் போட்டுவிட்டு டிக்கெட் ஒன்றைக் கிழித்துக் கிழவியிடம் கொடுத்து "இதைப் பத்திரமா வைத்துக்கொள்" என்றான். அவன் அவளை முன் பின் கண்டதில்லை. இருப்பினும், அவள் 'தன் தாயைப்போல் வயது முதிர்ந்தவள்—அதிலும் தன்னைப் போல் ஒரு பொறுப்பற்ற மகனின் தாய்!' இந்த நினைவே அவன் உள்ளத்தை நெகிழச் செய்து விட்டது.

அன்று அவன் வீடு திரும்பும்போது அவனுக்காக ஒரு சந்தோஷமான செய்தி காத்திருந்தது. அவன் தாய் திரும்பி வந்திருந்தாள்! "இந்தா வள்ளி! இந்தப் புதுப் புடவையை எடுத்துக் கட்டிக்கொள்" என்று உத்தரவிட்டாள் அவன் தாய்.

"ஏதம்மா இந்தப் புடவை?" என்று வியப்போடு கேட்டான் கந்தசாமி. புத்தம்புது கறுப்பு பட்டுப் புடவையில் காட்சியளித்த தன் மனைவியைக் கண்டு. "நான் ஒரு ஐம்பது ரூபா சேர்த்து வைத்திருந்தேன் கந்தசாமி. இந்தப் பத்து ரூபாயும் போட்டு, வள்ளிக்கு, அவ ஆசைப்படற மாதிரி கறுப்பு சேலை, பட்டிலேயே எடுத்து கொடுத்திடணும்னு எனக்கு ஆசை. அதுதான் அன்றைக்கு அவன் ஒரு நூல் புடவையைச் சொல்லாமல் கொள்ளாமல் எடுத்துக் கொண்டு வந்த உடனே எனக்குக் கோபம் வந்தது" என்றாள் தங்கம்மா.

இருமல், ஜலதோஷம் இவை
களை கவனிக்காமல் அசிரத்தை
யாக இருந்தால் பின்னால்
தொல்லைகள் பல நேரலாம்



இவைகள் அநேகமாக நிமோ
னியா, ப்ளூரஸி, ஆஸ்துமா,
க்ஷயம் முதலிய ரோகங்கள்
பிடிக்க அறிகுறிகளாக இருக்
கும். இருமலும் ஜலதோஷ
மும் வராமல் இருக்க முன்
ஜாக்கிரதையுடன் இருங்கள்.
ஒரு வேளை இவை பிடித்து
விட்டால் தாமதியாமல் உட்
கொள்ள வேண்டிய மருந்து

# கஸபின்

●

இருமலுக்கும் ஜலதோஷத்திற்கும்
இன்றியமையாத சஞ்சீவி

●

தயாரித்த முறை அங்கீகரிக்கப்பட்டது

---

## பெங்கால் கெமிகல்

கல்கத்தா : பம்பாய் : கான்பூர்

ஏஜண்டுகள் :

என். தேசாய் கௌண்டர் & கோ.
41, பந்தர் தெரு :: சென்னை

---

# FOR TWO WEEKS MORE

## JEWEL FITTED WATCHES

AT LESS THAN HALF PRICES




**ALARM TIME PIECE**

SPECIAL QUALITY ~~26/-~~ 15/-
SUPERIOR ~~36/-~~ 16/8



1606-5 JEWELS ROLD GOLD ~~75/-~~ 34/-
„ 15 JEWELS ROLD GOLD ~~90/-~~ 43/-



1607-5 JEWELS ROLD GOLD ~~66/-~~ 33/-
„ 15 JEWELS ROLD GOLD ~~96/-~~ 44/-



1608-5 JEWELS CROME CASE ~~46/-~~ 22/-
„ „ „ ROLD GOLD ~~66/-~~ 28/-
„ 15 JEWELS SUPERIOR ~~86/-~~ 42/-

Postage extra. Free on order for two.

**PIONEER WATCH Co**

POST BOX NO 11428 CALCUTTA

செறிந்த கூந்தலினிடையே
திகழும் ஸௌந்தரியின்
முக மண்டலத்துக்கு ஈடு ஏது?



கூந்தலையும் கூந்தலழகையும்

# கேசவர்த்தினியின்

உதவியால் இன்றே
பெருக்கிக் கொள்ளுங்கள்

கேசவர்த்தினி அணா 14. ஷாம்பு அணா 14. எங்கும் கிடைக்கும்

தென் இந்திய ரஸாயனசாலை - - - கோயமுத்தூர்

---



எக்ஸிமா

சரும வியாதிகளுக்கு, முக்கியமாக எக்ஸிமாவுக்கு ஸைமாக்ஸ் மிகவும் சிறந்தது. சருமத்தின்மேல் ஏற்படும் எரிச்சலை மாயமாய்ப் போக்குகிறது. சருமத்தை இயற்கை நிறத்துக்கும் தன்மைக்கும் கொண்டு வருகிறது. என்றும் ஒரு பாட்டில் உங்கள் வசம் இருக்கட்டும்



**ZIMAX**
**AN ECZEMA CURE**



தந்த சுகாதாரம்

சொத்தையான பற்கள் சீரான தேக ஆரோக்கியத்தைப் பாதிக்கின்றன. தைமோஸினுல் பற்களையும் ஈறுகளையும் பாதுகாருங்கள். பயோரியா ஜிஞ்ஜிவிடிஸ் நோய்களையும் சுவாசத்தில் துர்நாற்றத்தையும் தவிர்க்கிறது. உங்கள் குடும்பத்துக்கு மிக அவசியமானது தைமோஸின்



**THYMOCIN**
**FOR DENTAL HYGEINE**

டி. எம். தாகூர் & கோ., 9, ஸ்டிரிங்கர்ஸ் தெரு, ஜி. டி., மதராஸ்

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Gardens, Poonamallee High Road, Kilpauk, Madras

# டயபெப்ஸின்




ஆகாரம் சரிவர ஜீரணமாக டயஸ்டாஸ் பெப்ஸின் என்னும் இருவகைப் பொருள்கள் அத்யாவசியமானவை. இவைகள் இரண்டும் உயர்ந்த ரசாயன முறையில் சேர்ந்ததுதான் டயபெப்ஸின். ஆகாரத்துக்குப் பின் ஒரு டீஸ்பூன் டயபெப்ஸின் உட்கொண்டால் ஜீரணச் செயல் க்ஷணமே ஆரம்பித்து, பாக்கி ஜீரண வேலை வயிற்றுக்கு மிக எளிதாகிறது. உங்கள் ஆகாரத்தின் முழுப் போஷணையும் அடைய இதுவே சிறந்த மார்க்கம்.

## யூனியன் டிரக், கல்கத்தா

ஏஜண்டுகள்: அப்பா அண்டு கோ., மதராஸ்
மற்றும் எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

**UNION DRUG. CALCUTTA**

---

பருத்தி நூல்களுக்குப் பிரதான ஸ்தாபனம்

# மதுரை மில்ஸ் கம்பெனி லிட்.

## மதுரை - தூத்துக்குடி - அம்பாசமுத்திரம்

**5,00,000 நூற்கும் கதிர்கள் நம்பர் 80 வரை நூல்கள்**

**எங்களுடைய விசேஷமான நூல்கள்:** ஒத்தை நூல், இரட்டை நூல், பனியன் நெசவுக்கேற்ற கோன் நூல், மில் நெசவுக்கேற்ற சீஸ் நூல், முறுக்கேற்றிய நூல்.

**நாங்கள் சப்ளை செய்வது:** கைத்தறி, இயந்திரத் தறி, பின்னல் தறிகளுக்கு வேண்டிய காரிக்கன் நூல்கள், இயந்திர நெசவுக்கேற்ற வார்ப்பு நூல்கள் கனத்த வெப்பிங். கான்வாஸ் முதலியவைகளுக்கேற்ற மடக்கு இரட்டை நூல்கள், மற்றும் பின்னல் இயந்திர நெசவுக்கேற்ற மிருதுவான சன்ன நூல்கள். எங்கள் எகிப்திய பருத்தி நூல்கள் இறக்குமதியாகும் நூல்களைப்போல் எல்லாவகையிலும் கீர்த்தி பெற்றவை. நாங்கள் நூற்பதைத் தவிர நெய்வதில்லை.

**மானேஜர்கள்: ஏ: & எப்: ஹார்வி லிமிடெட்**

REGD. No. M. 4392

